# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை




சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-௨0௧௨, ஆனி July '81 [பரல்-௧௧

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---


## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்

### ADVERTISEMENT TARIFF

மேலுறை 4-ஆம் பக்கம் :

முழுப்பக்கம் : ரூ 100/- அரைப்பக்கம் ரூ. 60/-

மேலுறை 3-ஆம் பக்கம் :

முழுப்பக்கம் : ரூ 80/- அரைப்பக்கம் ரூ. 40/-

## "செந்தமிழ்ச் செல்வி"

### ஆண்டுக் கையொப்பம்

(Subscription Rate)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00 வெளிநாடு ரூ. 200 00

## கழக நூல்கள்
## கண் பாதுகாப்பு, தோல் பாதுகாப்பு
## வெளியீட்டு விழா
## (30 – 6 – 1981)



தமிழகக் கல்வி அமைச்சர்
மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள்
தலைமை உரை ஆற்றுதல்



தமிழக நல்வாழ்வுத்துறை அமைச்சர்
மாண்புமிகு எச். வி. ஹண்டே அவர்கள்
நூல்களை வெளியிட, திரு. வி. ஜி. சந்தோஷம் அவர்கள்
அவற்றைப் பெற்றுக்கொள்ளுதல்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௫ | திருவள்ளுவர் ஆண்டு ௨௰௧௨, ஆனி<br>சூலை 1981 | பரல் ௧௧ |
|---|---|---|


## மணிவிழாக் காணும் கழகத்தின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெருமக்களுக்குக் கழக ஆட்சியரின் நன்றியுணர்வு

(முன் இதழ்த் தொடர்ச்சி)

மூவர் தேவாரத்தை மூன்று பகுதிகளாக வெளியிடும் பொருட்டுப் பண்ணிற்கேற்பச் சீர்பிரித்துப் பதிகவரலாறு எழுதித் தந்ததோடும் அகத்தியர் தேவாரத்திரட்டுக்கு உரை எழுதியுமுள்ள சைவப்பெரும்புலவர் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியாரும் நீதிநூல்களுக்கு உரை எழுதியும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணத்திற்கு விரிவுரை எழுதியும் பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்திற்காகக் கழக ஆட்சியாளர் கருத்திற்கிணங்கச் சிலப்பதிகாரம், அகநானூறு, மணிமேகலை ஆகிய மூன்று சங்க நூல்களுக்குக் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, உரை வேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை ஆகியோர் துணை கொண்டு உரையெழுதிய நாவலர் பண்டித வேங்கடசாமி நாட்டார் அவர்களையும், பதிற்றுப்பத்து, புறநானூறு, யசோதர காவியம் ஆகியவற்றிற்கு விளக்க உரை எழுதியும் காப்பிய நூல்களுக்குச் சுருக்கமும் உரைநடையும் எழுதியுமுள்ள ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களையும் கழகம் என்றும் போற்றுதற்குரியதாகும்.

நாளதுவரை பத்துநூறுயிரம் படிகள் விற்பனையாகியுள்ள திருக்குறள் தெளிவுரையினை எழுதியும் தமிழ்மொழிவரலாறும் மாணவர்களுக்கேற்ற நூல்கள் சிலவும் எழுதிய டாக்டர் மு. வரதராசனார், சங்கநூற்பேழையை உருவாக்குவதற்குப் பெரும்பான்மையான சங்கநூல்களுக்கெல்லாம் உரையெழுதியதோடு கல்லாடம், பட்டினத்தார்பாடல் ஆகியவற்றிற்கு விரிவுரையும் பண்டிதமணி

வரலாறும் எழுதித்தந்த பெருமழைப்புலவர் பொ. வே. சோம சுந்தரனுர் ஆகியோர் கழகம் போற்றுதற்குரியராவர்.

என் உடன்பிறப்பைப்போல் உழுவல் அன்புகொண்டு மெய்ப்புத் திருத்துதல்முதல் அச்சுப் பணிகள் அனைத்திலும் உடனிருந்து உதவிபுரிந்த காழி சிவ கண்ணுசாமிப் பிள்ளை அவர்களை என்றும் மறப்பதற்கில்லை. பள்ளிப் பாடநூல்களை முதற்கண் வெளியிட்டுக் கழகத்திற்குப் பொருள் வருவாய் பெருக்கத்திற்குத் துணைபுரிந்த திரு. தி. சிவசைலம் பிள்ளை அவர்கள் என்றும் போற்றிப் புகழ்தற்குரியராவர்.

இந்நூற்றுண்டில் இணையற்ற சமயச்சொற்பொழிவாளர்களுள் தலைசிறந்த ஒருவராய்த் திகழ்ந்த திருப்பாதிரிப்புலியூர் ஞானியா ரடிகள் ஆற்றிய கந்தபுராண விரிவுரைகளைக் கேட்டு அவர்தம் திருப்பெயர் என்றும் நிலைத்துநிற்கக் 'கந்தர்சட்டிச் சொற் பொழிவுகள்' என்ற நூலை எழுதித்தந்ததோடு மாணவர்களுக் கேற்ற துணைப்பாடநூல்கள் சிலவும் எழுதிய திரு. மு. இராசாக் கண்ணனுர் என்றும் போற்றுதற்குரியவராவர்.

கழகப் பெரும்புலவர் சித்தாந்த பண்டிதர் ப. இராமநாத பிள்ளையவர்கள் திருமந்திரம், தாயுமானவர் பாடல், திருவாசகம், மெய்கண்டசாத்திரம் ஆகியவற்றிற்கு உரை எழுதிக் கழக சமயப் பணிக்குப் புகழூட்டிய பெருமகனுராவர். செல்லூர்க்கிழார் இராமசாமி பிள்ளை அவர்கள் புலவர்கள் புரிந்துகொள்வதற்குக் கடினமான சமுத்திரவிலாசம், சந்திரவிலாசம் ஆகியவற்றிற்கு உரைஎழுதிப் புகழ்பெற்றனர்.

டாக்டர் மா. இராசமாணிக்கனுர் மொகஞ்சதரோ, பல்லவர் வரலாறு ஆகிய நூல்கள் வெளிவரத் துணைநின்றனர். பன் மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் ஆங்கிலத்தமிழ் அகராதி, குமரிக்கண்டம், குடியாட்சி, சேக்ஸ்பியர் கதைகள் மற்றும் பல் வகைத் தலைப்புக்களில் கதைத் தொகுப்புகள் எழுதிக் கழகத்துக்குப் பெரும்புகழ் ஈட்டித் தந்தனர்.

திரு. மா. சண்முகசுப்பிரமணியம் அவர்கள் சட்டவியல், சட்டத்தமிழ், தீங்கியல் சட்டம், குறள்கூறும் சட்டநெறி ஆகிய சட்டநூல்களையும் பள்ளி மாணவர்க்கேற்ற துணைப் பாடநூல்கள் சிலவும் எழுதியுள்ளதோடு சட்டநூல்கள் சிலவற்றிற்குப் பரிசும் பாராட்டும் பெற்றனர்.

அறிவியல் பெரும்புலவர் திரு. பி. எல். சாமி, ஐ.ஏ.எஸ். சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், புள்ளினவிளக்கம்,

விலங்கினவிளக்கம் ஆகிய நூல்களை யெழுதிப் பரிசும் பாராட்டும் பெற்றவராவர். தொடர்ந்து செல்விக்கு அவர் எழுதிவரும் அறிவியல் கட்டுரைகள் பெரிதும் போற்றிப் புகழப்படுகின்றன.

டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் இளைஞர் வானொலி, இளைஞர் தொலைக்காட்சி, அதிசயமின்னணு, இராக்கெட்டுகள் ஆகிய நூல்களையும், அஞ்சனம் அழகிய பிள்ளை காட்டுவளம், பழவளம் ஆகிய நூல்களையும் எழுதித்தந்ததோடு சில நூல்களுக்கு அரசிடமிருந்து இருவரும் பரிசும் பாராட்டும் பெற்றுள்ளனர்.

ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார் ஆட்சித்துறைத் தமிழ், நகராட்சிமுறை முதலிய நூல்களை ஆக்கித்தந்து ஆட்சித் துறைக்கு நற்பணியாற்றி வருகின்றனர். நீதிபதி பக்கிரிசங்கர் அவர்கள் சட்டமன்ற நடைமுறை என்ற நூலை ஆக்கித்தந் துதவினார். திரு. வீராசாமி நாயுடு அவர்கள் ஆவணங்களும் பதிவு முறையும், இலக்கியச்செவ்வி என்ற நூல்களை உருவாக்கினார்.

மறைத்திரு மறைமலையடிகளார் மாணவர்களில் பெரும்புகழ் பெற்ற இளவழகனார் என்னும் அழகரடிகள் பண்டைத்தமிழர் இன்பியல் வாழ்க்கை, பண்டைத்தமிழர் பொருளியல் வாழ்க்கை, சங்கநூற்கட்டுரைகள், சங்கஇலக்கிய இன்கவித்திரட்டு, மறைமலை யடிகள் மாட்சி முதலிய நூல்களை இயற்றி எல்லையில் சிறப் பெய்திய செம்மலாவர்.

திறனாய்வுவித்தகர் உயர்திரு. கு. கோதண்டபாணி பிள்ளை அவர்கள் முதற்குறள் உவமை, பழந்தமிழ் இசை முதலிய திறனாய்வு நூல்களை எழுதித்தந்து கழகத்துக்குப் புகழ்ஊட்டிய பெருமகனார் ஆவர்.

மாவட்டக்கல்வி அதிகாரியாக இருந்த இர. பாலகிருட்டிண முதலியார் திரு. இளவழகனார் ஆக்கிய சங்க இலக்கிய இன்கவித் திரட்டினை 'The Golden Anthology of Tamil Literature'' என்னும் தலைப்பில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் பெரும்பாலானவற்றை மொழிபெயர்த்தும் தந்துள்ளமை மிகவும் போற்றுதற்குரியன.

ஆராய்ச்சி அறிஞர் சீனி. வேங்கடசாமி எழுதிய கிறித்தவமும் தமிழும், பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும் ஆகிய நூல் களைக் கழகவழி வெளியிடத்தந்து புகழ்சூட்டியவராவர்.

உரைவேந்தர் அவர்களின் மாணவரும் முன்னாள் சட்டமன்றத் தலைவருமான திரு. கா. கோவிந்தன் அவர்கள் தாம் எழுதிய சங்கத்தமிழ் அரசர் வரிசை 6 நூல்களும், சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை 16 நூல்களும் கழகவழி வெளியிடச் செய்தது என்றும் புகழ்ந்து போற்றுதற்குரியது.

கழகப் புலவர் குழுவினில் சில ஆண்டுகள் அமர்ந்திருந்து தூது, உலா, கலம்பகம் பற்றிய நூல்கள் சிலவற்றிற்கு உரை எழுதியும் மெய்ப்புக்கள் திருத்தியும் சிறந்தமுறையில் பணியாற்றிய மதுரைச்சங்கப் புலவர்களில் ஒருவராய் இருந்த திருவாளர். தி. சங்குப்புலவர் செய்த பணி பெரிதும் போற்றுதற்குரியது.

பெரியபுராண வசனம், திருவிளையாடல் வசனம், சீவகசிந்தா மணி வசனம் ஆகியவற்றோடு பள்ளிக்கு வேண்டிய மறைமலை யடிகள் வரலாறு, ஆர். கே. சண்முகஞ் செட்டியார் வரலாறு போன்ற பெருமக்கள் சிலரின் வரலாறுகளையும எழுதித்தந்து புகழ்பெற்றவர் புலவர் அரசு.

நெல்லைப் புலவர்மணி அ. க. நவநீதகிருட்டிணன் இலக்கியத் தூது, அறநூல்தந்த அறிவானர் போன்ற பள்ளிப்பாடநூல்கள் சில வற்றை எழுதிப் புகழ்பெற்றவர்; சொற்பொழிவாற்றும் திறனாளர். நெல்லையில கழகசசொற்பொழிவு விழாக்களைச் செவ்வனே நடத்து வதற்கு அவர்களும், திரு. இராம. கனகசபாபதி பிள்ளையவர்களும சேர்ந்து செய்த உதவி என்றும் மறப்பதற்கில்லை.

தணிகைமணி செங்கல்வராய பிள்ளையவர்கள் பன்னிரு திரு முறைகளில் முதல் ஒன்பது திருமுறைகளுக்கு 'ஒளிநெறி' என்ற தலைப்பில் ஒன்பது நூல்களும் ஒளிநெறிககட்டுரை என்ற தலைப்பில் ஆறு நூலகளும எழுதிததந்தமை மிகவும் போற்றுதற்குரியது. அவர்கள் செய்த அவவரிய திருவருட் செயலைத் தமிழக அரசுக்கு எடுததுக்காட்டி மதுரைப்பல்கலைக் கழகவழி 1—9—1969இல் அவாகளுக்கு டாக்டர் பட்டம் அளிக்கப்பட்டது.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் கல்லாடர் உரை, நச்சினார்க் கினியர் உரை, இளம்பூரணர் உரை, தெய்வச்சிலையார் உரை, பொருளதிகாரம செய்யுளியல் உரை, முத்துவீரியம் ஆகியவற்றைக் கழகவழி அச்சிடுவதற்குச் செப்பம்செய்து தந்த தொல்காப்பியச் செல்வர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் திறமை மிகவும் போற்றிப் புகழ்தற்குரியது.

(தொடரும்)

## பல்துறைச் செல்வர் டாக்டர் ம. பொ. சி. பல்லாண்டு வாழ்க!

எளிய வறுமைக் குடும்பத்திலே பிறந்து, வலிய ஆங்கிலேய அடக்குமுறைக்கு அடிபணியாது எதிர்த்து நின்று, பன்முறை சிறைக்களம் புகுந்து விழுப்புண்போலக் குடல் புண்ணை நிலைக் களனாகப் பெற்று, அச்சுக்கோப்



பாளராகித் தமிழை எழுத் தெண்ணிக் கற்று, வெல்லுஞ் சொல்வல்ல சொல்லாண்மை கைவரப் பெற்று, எக்சு-ரே கதிர் போன்ற ஒளிக்கண்ணினால் எப்பொருளையும் ஊடுருவி நோக்கி உண்மை உணர்ந்து, உணர்ந்த உண்மைகளைச் சிந்தனைப் பட் டறையில் புடமிட்டு, வடித் தெடுத்த கருத்துக்களைப் பழகு தமிழில் வாரி வழங்கும் வள் ளன்மை பெற்று, தமிழே மூச்சாய், தமிழின வாழ்வே பேச்சாய்த், தமி ழுக்கும் தமிழகத்திற்கும் கேடு சூழ்வாருக்கு ஏச்சாய் வாழ்ந்துவந்து, தொடக்கப்பள்ளியில் ஒரு சில ஆண்டுகளே படித்திருந்தாலும் தமிழ்ப் புலமையின் உச்சாணியை எட்டிப்பிடித்து 112 நூல்களைத் தரங்குறையாத் தமிழில் எழுதிக் குவித்து, தமிழ் ஒன்றே கற்ற தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாத ஐயரவர்கள் தாட்சிணாத்திய கலாநிதிப் பட்டம் பெற்றதுபோலத் தமிழ் ஒன்றே கற்றிருப்பினும் டாக்டர் பட்டத்தைப் பல்கலைக் கழகம் முந்தி வந்து அளிக்கப் பெறும் புகழ் பெற்றுக், காந்தியடிகளின் கொள்கைகளை உறுதி யாகக் கடைப்பிடிக்கும் தொண்டராய் எப்போதும் கதராடையே உடுத்தி வந்து, தூய ஆடையினைப் போலவே தூய எண்ணம், தூய உள்ளம் கொண்டு, அரசியல்வாதிகளும் ஒழுக்கத்துடன் வாழ முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் நின்று, தம் கொள்கைப்பிடிப்பைத் தளரவிடாது அனைத்துக் கட்சிகளையும் அரவணைத்துச் செல்லும் அற்புதப் பாங்கினைப் பெற்று, காட்சிக் கெளியராய்க் கடுஞ்சொல் இல்லாதவராய்ப் பன்னெடுங்காலம் 'செங்கோல்' நடாத்தும் சிறப்பினைப் பெற்று, எப்பொருளைப்பற்றிப் பேசச் சொன்னாலும் சுணங்காது அப் பொருளின் மெய்ப்பொருள் கண்டுணர்ந்து கேட்பவர் வியக்கக் கேளாரும் வேட்ப நகைச்சுவை பொதுளச் சிந்தனையைத் தூண்டி அனைவரும் தம்வயப்படுமாறு

பேசவல்ல சொல்லாண்மையைப் போலவே எதைப்பற்றி எழுதச் சொன்னாலும் அப் பொருளைத் தம் சிந்தனைக்கடலில் மூழ்க வைத்து முத்துக்களாக வெளிக்கொணரும் எழுத்தாண்மையும் பெற்று வறுமையை ஆளப் பிறந்த மகனாயிருப்பினும் தன்னம்பிக்கையும் தளரா முயற்சியும் சளையாத உழைப்பும் மேற்கொண்டால் ஊழையும் உப்பக்கங் கண்டு வாழ்க்கையின் ஏணிப்படியில் இட்டடி எடுத்து வைத்து ஏறிச் சென்று உச்சியில் அமர்ந்து அரசாளப் பிறந்த மகனுமாகலாம் என்பதனை உலகுக்கு எடுத்துக்காட்ட உற்றதொரு சான்றாகத் திகழ்ந்து, நாடாளும் முதலமைச்சரையும் மற்ற அமைச்சர்களையும் மேலவைத் தலைவராயிருந்து தம் நாவால் ஆளும் நல்வாய்ப்புப் பெற்றுச், சிறு தொட்டிலில் கண்வளரும் சிறுமை வாழ்வில் பிறந்தாலும் அரசு கட்டிலில் அமர்ந்து ஆணை செலுத்தும் வாய்ப்பு ஊக்கமுடையோர்க்கே வாய்க்கும் என்ற உண்மைக்கோர் ஒளிவிளக்காய்த் திகழ்ந்து, இந்திராதி தேவர் போற்ற வாழ்வதுபோல இந்திய முதலமைச்சர் இந்திராகாந்தி அன்னை முதல் குமுகாயத்தின் கடைநிலையில் வாழும் குப்பன்கள் வரை எல்லோரும் ஏத்தெடுத்துப் போற்றும் ஏற்றம் பெற்று, எல்லைப் போராட்டத்தில் தமிழ்த் தெய்வத்தை மீட்டதன் மூலம் தமிழன்னையைக் காத்ததுபோல் ஆங்கிலம் முதலிய பிறமொழி ஆதிக்கங்களிலிருந்து தமிழை மீட்பதற்காக எல்லையிலாப் போராட்டங்களை இயற்றிவந்து, இவ்வாறு எழுத்துத்துறை, பேச்சுத் துறை, அரசியல் துறை, ஆட்சித் துறை, செய்தி இதழ்த் துறை, திறனாய்வுத் துறை, ஆராய்ச்சித் துறை, சமயத் துறை, கல்வித் துறை முதலிய பல துறைகளிலும் துறைபோய வல்லாண்மை பெற்ற பல்துறைச் செல்வர் (Versatile genius), தமிழரசுக் கழகத் தலைவர், தமிழக அரசின் மேலவைத் தலைவர், தமிழினத் தலைவர், தமிழ்த்தாயின் தவப் புதல்வர், சிலம்புச் செல்வர், இந்திய ஒருமைப்பாட்டு ஒளிவிளக்கு, தமிழ்ப்பண்பாட்டின் கலங்கரை விளக்கு, தமிழுக்காகவும் தமிழருக்காகவும் முக்கால் நூற்றாண்டு வாழ்க்கையை ஈகம் செய்து எஞ்சிய கால் நூற்றாண்டையும் எஞ்சாது தமிழினத்துக்காகவே பாடுபடத் துணிந்துள்ள செயல் வீரர், எழுபத்தைந்து வயது இளைஞர், அருங்குணச் செம்மல், ஒப்பிலாத் தலைவர் உயர்திரு சிலம்புச்செல்வர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் 26—6—81இல் தம் வாழ்க்கைப் பயணத்தில் எழுபத்தாறாவது (மைல்) கல்லை நோக்கிப் புறப்பட்ட பிறந்த பொன்னாளில்

> “இன்றும் இயற்றுக தொண்டே அதனால்
> ஏற்றம் பெறுக தமிழ் நன்றே”

என்று நினைந்து உளமார வாயாரப் பல்லாண்டு வாழ்க வாழ்க வெனப் பன்முறை வாழ்த்திப் போற்றி வணங்குகின்றோம்.

எப்போதும் தம் உடல் நலமில்லாது போயினும், குழந்தைக் காக மருந்துண்ணும் தாய்போலத் தந்நலம் மறந்து தமிழ் நலம் பேணும் தலைவர் யார்? ஒடியும் உடலாயிருந்தாலும் ஒடியா உள்ளத்துடன் போராட்டக் களங்கள் பல கண்ட தானைத்தலைவர் யார்? 'எங்கும் எதிலும் தமிழ்' என்ற உயிர்க்கொள்கையில் எப்போதும் உறுதியாயிருந்து தமிழக அரசு இத் திட்டத்தை விரைவில் செயல்படுத்தத் தூண்டிய மணிவிளக்கு யார்? தம் கட்சி மிகச் சிறப்பாக வளராது போயினும் நாடு வாழவேண்டு மென்று விரும்பிய நாட்டுப்பற்று மிக்க தலைவர் யார்? கயத் தாற்றில் தொங்கிய கட்டபொம்மனை இந்திய நாட்டு விடுதலைக்குப் போர்க்கொடி தூக்கிய முதல் வீரனாக எல்லோரும் உணரும்படி எடுத்துக் காட்டியவர் யார்? 'கண்ணகி கோவலன்' கதையை மட்டும் அறிந்திருந்த பாமர மக்கள் சிலம்பின் வென்ற சேயிழையாம் வீரக் கண்ணகியின் வீரூர்ந்த சிறப்புக்களைப் பாரோர் அறியச் செய்தவர் யார்? தேசீயக் கவி பாரதியைப் பாரறியச் செய்து, பாமரரும் போற்றும் வகையில் பாரதியைப்பற்றிப் பல நூல்கள் எழுதியவர் யார்? இராமலிங்க அடிகளாரைப்போல் ஓதாதுணர்ந்து உலகுக்கு ஒளிநெறி காட்டும் உத்தமன் யார்? சோசலிசம் என்றால் என்ன வென்றே புரியாத மக்களுக்கு அதன் விளக்கங்களைத் தந்து உண்மையான சோசலிசவாதியாக வாழ்ந்துவரும் ஒப்பற்ற தலைவர் யார்? காந்தியடிகளைப் போலவே அரசியலிலும் ஒழுக்கமும், பண் பாடும், சமயமும் ஒன்றிக் கலந்திருக்க வேண்டும் என்ற கருத் துடன் ஒழுக்க சீலராய்த் தமிழ்ப்பண்பாட்டின் தனிப்பெருங் காவலராய் விளங்கும் சான்றோர் யார்? அவர்தாம் ம. பொ. சி.

திருஞானசம்பந்தர் மூன்றாம் வயதில் பருகியது உமையன்னை வழங்கிய அருள்மிகு ஞானப்பால்; ம. பொ. சிவஞானம் பள்ளியில் மூன்றாம் வகுப்புவரை பயின்று பருகியது அமுதத் தமிழ்ப்பால். இவரும் திருஞானசம்பந்தரைப் போலவே உவமையிலாக் கலை ஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம், எல்லையிலாக் கலைஞானம் கைவரப் பெற்றார்; ஆம், இலக்கிய ஞானம், சொல்வன்மை ஞானம், உரைநடை ஞானம், திறனாய்வு ஞானம், தத்துவ ஞானம், ஆட்சித் துறை ஞானம், அரசியல் ஞானம் முதலிய பல்வகை ஞானங்களும் சமய ஞானத்துடன் கலந்து அறிவுப் பேரொளியாகி உண்மைச் சிவஞானமாகித் திகழ்கின்றார்.

கருவிலே திருவுடைய இவர் கற்றனைத்து ஊறும் அறிவு எனவறிந்து நாடோறும் பல்வகை நூல்களைக் கற்றுத் தம் உள்ள மெனும் ஊருணியை நிரப்பி வைத்துக்கொண்டார். செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் ஆதலின் புலவர் பெருமக்களிட

விருக்கள்மூலம் உரையாடித் தம் கேள்வி ஞானத்தை வளர்த்துக் கொண்டார்.

திரு. ம. பொ. சி. அவர்கள் பாட்டாளிகளின் கூட்டாளி; பாவலர்களின் பாடுபொருள்; செந்தமிழ்க் காவலர்; நாவன்மை படைத்த நாவலர்; நினைவாற்றல் மிக்க நீர்மையர்; சிந்தனை யூற்று; பண்பின் குன்று; புதுத்தமிழ்ச் சமுதாயச் சிற்பி; உழைப் பால் உயர்ந்த உத்தமர்; தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்; அரசியலில் வருவதுணரும் தொலைநோக்கறிஞர் (தீர்க்கதரிசி); அரசியல் சீர்திருத்தவாதி; தமிழ்த் தொண்டர்; தமிழினத் தலைவர்; தமிழகத் தலைநகராம் சென்னையையும், தமிழ்த் தெய்வம் வாழும் திருத்தணியையும் மீட்டுத்தந்த செம்மல்; தன்னுறுப்பின் திருவுரு.

பதவிகளால் இவர் பெற்ற நன்மையைக் காட்டிலும் அப் பதவிகள் இவரால் பெற்ற பெருமைகளே மிகுதி எனலாம்.

மாண்புமிகு ம. பொ. சி. அவர்கள் இப்போது அமர்ந்திருப்பது மேலவைத் தலைமை அரசுகட்டிலன்று; அஃது எழுபத்தைந் தாண்டுகள் இமைப்பொழுதும் நெஞ்சகத்தில் தன்னை மறவாது போற்றிவரும் 'சீர்த்தி'க்காகத் தமிழ்த்தாய் அவர் கேளாமே கொடுத்த வரமாகிய தமிழ் அரியணையே. ஆங்கிலம் பயிலாத (ஆனால் புரிந்து கொள்ளும்) ம. பொ. சி. அவர்கள் கல்வித்துறை யில் இளங்கலை, முதுகலை முதலிய எப் பட்டமும் பெறாது போயினும், பட்டங்களினும் மேற்பட்ட அறிவுநலஞ் சான்ற இவரைச் சென்னைப் பல்கலைக் கழகம் தான் பெருமை பெற்றுக் கொள்வதற்காக இவருக்கு அளித்த டாக்டர் பட்டம் ஒரு சிறப்புப் பட்டம் மட்டுமன்று; தமிழை மறந்தவர்களாலும், தமிழை இகழ்ந் தவர்களாலும் தமிழ்த்தாய்க்கு ஏற்பட்ட புண்களை ஆற்றும் தமிழ் மருத்துவராகவும் திரு. ம. பொ. சி. இருந்து வருகின்றார் என்பதை நினைவுபடுத்தும் வகையிலும் இந்த 'டாக்டர்' பட்டம் அமைந்துள்ளது. திரு. ம. பொ. சி. அவர்கள் நடாத்தி வரும் செய்தி ஏடு ஏட்டளவில் மட்டும் 'செங்கோல்' அன்று; அஃது எந்தக் கட்சியாவது தமிழுக்கோ தமிழினத்துக்கோ தவறு செய்தால் உடனே அதனை எடுத்துக் கூறியும், இடித்துக் கூறியும், தடுத்து நிறுத்தியும், தக்காங்கு ஒறுத்தும் தகவாண்மையை நிலை நாட்டும் சொல்லாட்சிச் செங்கோல் ஆகும்; மேலும் அஃது ஆசிரி யரின் செவ்விய உள்ளத்தினின்று எழும் கருத்துக்களைச் செவ் விதின் வரையும் எழுதுகோல் தீட்டிய செங்கோலுமாகும்; எல்லைப் போராட்டத்தில் திரு. ம. பொ. சி. அவர்கள் மீட்டது திருத்தணிகை மட்டுமன்று. திருத்தணிகையில் வீற்றிருக்கும் தமிழ்த் தெய்வ மான முருகனையே தமிழகத்துக்கு மீட்டுத் தந்ததால் தமிழ்த்தாய்

ஈன்ற பொழுதின் பெரிதுவந்து வாழ்த்துக் கூறு முகத்தான் காட்டியது அத் தாயின் திருத் தணிகை (தணிந்து காட்டிய கை)யும் ஆகும். முருகனை முன்னுவோர்க்கு அவன்றன் வேல் வந்து முன்னிற்பது போலத் திருத்தணிகையை நினைவோர்க்குத் தணிகை முருகனுக்கு முன்னதாகத் தமிழர் நெஞ்சங்களில் வந்து முன்னிற்பவர் தலைவர் ம. பொ. சி. அவர்களே.

வரலாற்றுப் பாடங்களில் தமிழும் தமிழகமும் புறக்கணிக்கப் பட்டதையறிந்து 'விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு', 'விடுதலைக்குப் பின் தமிழ் வளர்ந்த வரலாறு', 'சுதந்தரப் போரில் தமிழகம்', 'எனது போராட்டம்' ஆகிய வரலாற்று நூல்களை இவர் வரைந்துள்ளார். கப்பலோட்டிய தமிழனையும், கட்ட பொம்மனையும் உலகம் உவந்து போற்றுமாறு ஏற்றம் பெறச் செய்தவர் இவரே. பண்டிதர் கையிலகப்பட்டுச் சிக்கித் தவித்த தமிழ் இலக்கியங்களுக்கு விடுதலை கொடுத்துப் பாமரர்களும் இலக்கிய அறிவைப் பெறும் வகையில் 'வள்ளுவர் வகுத்த வழி', 'இலக்கியச் செல்வம்', 'கம்பர் கவியின்பம்', 'வீரக் கண்ணகி' முதலிய நூல்களைப் படைத்தளித்தார். வள்ளலாரின் ஒருமைப்பாட்டை வையகம் உணர்ந்துகொள்ளும் வகையில் வடிக்கும் நற்றமிழில் நூலொன்றை வடித்துத் தந்தார். அந் நூலை நடுவண் அரசின் இலக்கியக் கலைக் கழகம்(சாகித்திய அக்காடெமி) பாராட்டி ரூ. 5,000 பரிசளித்தது. 'எனது போராட்டம்' என்ற வரலாற்று நூலுக்குத் தமிழக அரசு 6—6—81இல் ரூ. 2,000 பரிசிசு நல்கியது. தமிழ்ப் பேராசிரியர்களும் வியந்து போற்றும் வகையில் சிலப்பதிகாரத் திறனாய்வு, சிலப்பதிகார ஆய்வுரை, கலிங்கத்துப்பரணி திறனாய்வு ஔவை—யார்? போன்ற திறனாய்வு நூல்களைத் திறம்பட ஆய்ந்தளித்துள்ளார்.

> *"உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூல்கள்*
> *ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்*
> *சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்"*

என்று பாவேந்தர் பாரதிதாசனார் விரும்பியதுபோல எளிய இன்றமிழில் ஏற்றமிகு நடையில் ஊற்றமிகு கருத்துக்களை எண்ணிலா நூல்களில் வடித்துத் தந்து வருகின்றார்.

முத்தமிழுள் ஒன்றான நாடகத் தமிழை நலனுற வளர்த்து வந்த ஔவை தி. க. சண்முகம், தி. க. பகவதி இருவரையும் தம் இரு கைகளாகத், தோழர்களாகக் கருதி வந்துள்ளார். எங்கெங்கே செல்லினும் இவ் விருவரையும் அழைத்துச் செல்வதும் உரையாடுவதுமாக இருப்பார். இத்தகைய நல்ல நட்புச் செல்வமும் பெற்றிருந்தார் ம. பொ. சி. அவர்கள். (இப்போது திரு.

தி. க. பகவதி அவர்கள் மட்டும் ஓர் ஒப்பற்ற துணைவராக இருந்து வருகின்றார்.)

இக்காலத்தில் ஒப்பற்ற சொற்பொழிவாற்றல் வாய்ந்தவர்களாகத் திகழும் புலவர் கீரன், புலவர் கலிவரதன் ஆகியோரையும் குடந்தை பாலு, குடந்தை சுந்தரேசன் ஆகியோரையும் சொல்வீரர்களாக உருவாக்கித் தமிழ் உலகுக்குத் தந்த பெருமை இவரையே சாரும். பிற எவரும் பின்பற்ற முடியாத சொற்பொழிவுத் திறன் படைத்த இவர் போற்றத்தக்க இன்னும் பல சொற்பொழிவாளர்களையும் உருவாக்கியுள்ளார்.

திருவாளர்கள் கவிஞர் கா. மு. ஷெரீப், கவிஞர் கு. சா. கிருட்டிணமூர்த்தி, கவிஞர் கு. மா. பாலசுப்பிரமணியம், கலைஞர் ஏ. பி. நாகராசன், நடிகர் திலகம் சிவாஜிகணேசன், சிங்கத்தமிழன் சின்ன அண்ணாமலை, ஜி. உமாபதி, பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி, டாக்டர் ம. ரா. பே. குருசாமி பேராசிரியர் இரா. இளங்கோவன் போன்ற பல்வகை அறிஞர்கள் திரு. ம. பொ. சி. அவர்களைத் தம் தலைவராய் ஏற்றுப் போற்றி ஏற்றம் பெற்றுள்ளனர்.

செந்தமிழ்ச் செம்மல் ம. பொ. சி. அவர்கள், இவ்வாண்டு பணிவிழாக் காணும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்மீது அளவிலாத ஈடுபாடுடையவர்; கழகம் நடாத்திய பற்பல விழாக்களில் பங்குபற்றிப் பயனுறும் சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார்; பவளவிழாக் கண்ட சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகக் காவலர் தாமரைத்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள்பால் தணியாத பற்றும் மதிப்பும் வைத்திருப்பவர். சென்னை மாநகர் நூலகக் குழுத் தலைவரா யிருந்தபோது தரம் வாய்ந்த நூல்கள் கழக நூல்களே என்பதறிந்து மூன்று நூறாயிர ரூபாவுக்குக் கழக நூல்களை நூலகங்களுக்கு வாங்குவித்துக் கழக வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்த தமிழ்ச் செம்மலாவர்.

இவருடைய ஆற்றல்களையெல்லாம்—பண்புச் சிறப்புக்களையெல்லாம் விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும். இவர்தம் அரிய ஆற்றல்களை உணர்ந்தவர்கள் எல்லாரும் "என்னானாய் என்னானாய் என்னில் அல்லால் ஏழையேன் என்சொல்லி ஏத்துகேனே" என்று வியந்து போற்றுகின்றனர். இத்தகைய தமிழ்நெஞ்சத் தலைவர் தமிழுக்குந், தமிழகத்திற்குங் கிடைத்தற்கரிய மாபெருஞ் சொத்து.

இச் செந்தமிழ்ச் செல்வரை ஐம்பத்தாறு ஆண்டுகளாகத் தமிழறிஞர் இல்லங்களில் புகுந்து தமிழ் வளர்த்துவரும் இச் செந்தமிழ்ச் செல்வி தமிழன்னையாக நின்று வாழ்த்திப் போற்றிப் பல்லாண்டு கூறுகின்றாள்! வாழ்க ம. பொ. சிவஞானம்.!!

———

## கண் பாதுகாப்பு, தோல் பாதுகாப்பு நூல்கள் வெளியீட்டு விழா

ஸ்டான்லி மருத்துவமனை கண் மருத்துவத்துறைத் தலைமை மருத்துவர் டாக்டர் என். எஸ். சுந்தரம் அவர்கள் எழுதிய 'கண் பாதுகாப்பு', ஓய்வுபெற்ற ஸ்டான்லி மருத்துவமனை, தோல் மருத்துவத்துறைத் தலைமை மருத்துவர் டாக்டர் எம். நடராசன் அவர்கள் எழுதிய 'தோல் பாதுகாப்பு' என்னும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகளான இரு நூல்களின் வெளியீட்டு விழா 30—6—81 அன்று மாலை, சென்னை, மயிலை உட்லண்ட்சு விடுதியில், சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் விழாவிற்குத் தலைமை ஏற்றார். நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் எச். வி. ஹண்டே அவர்கள் நூல்களை வெளியிட்டார். அவற்றை வி. ஜி. பி. நிறுவனம் திரு. வி. ஜி. சந்தோஷம் அவர்கள் பெற்றுக் கொண்டார். தமிழக அரசு மருத்துவக் கல்வித்துறை இயக்குநர் டாக்டர் எஸ். ஞானதேசிகன், புகழ்பெற்ற கண்மருத்துவர், டாக்டர் எஸ். எஸ். பத்திரிநாத், சென்னைப் பொதுமருத்துவமனை டாக்டர் ஏ. எஸ். தம்பையா, முதுபெரும் கண்மருத்துவர் டாக்டர் பி. ஜே. நாயுடு, சட்டமன்ற உறுப்பினர் திரு. எல். இளையபெருமாள், கல்கி பி. எஸ். மணி, நாவலாசிரியர் திருமதி லட்சுமி இராசரத்தினம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

இவ் விழாவினை யொட்டிக் 'கண் பாதுகாப்பு' பற்றிய படக் காட்சி யொன்றும் நிறுவப்பெற்றது.

வரவேற்புரை :

கழகப் பொதுமேலாளர் திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் அனைவரையும் வரவேற்றார். அவர் தம் உரையில்,

''கழகம் இந்த அறுபது ஆண்டுகளில் 1700 க்குமேற்பட்ட நூல்களைச், சங்க இலக்கியம், சமயம், வரலாறு, அறிவியல் போன்ற பல துறைகளில் வெளியிட்டிருப்பதோடு, சில தமிழ்நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் வெளியிட்டிருக்கின்றது. இதனால் அயல்நாடுகளிலும், தமிழ் பரவும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. அதனுடைய தொடர்பாகத்தான் நாம் உலகத்தமிழ் மாநாடுகளைச் சிறப்பாக நடத்திக்கொண்டிருக்கின்றோம். எனவே இந்த வகையில் நல்ல தொண்டுகளைச் செய்துகொண்டிருக்கும் கழகத்திற்கு, அமைச்சர் அவர்களும், மற்றும் இங்குக் குழுமியிருக்கும் பெருமக்க

ளும் துணையாக நிற்பார்கள் என்று நம்புகின்றோம். எங்களுடைய அழைப்பிற்கிணங்கி இந்த விழாவிற்கு வந்திருக்கும் அனைவரையும் வருக வருக என அன்புடன் வரவேற்கின்றேன்."

**தலைமை உரை :**

தமிழக அரசின் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் ஆற்றிய தலைமை உரையில், "டாக்டர் சுந்தரம் அவர்கள் எழுதிய 'கண் பாதுகாப்பு' என்னும் நூலையும், டாக்டர் எம். நடராசன் அவர்கள் எழுதிய 'தோல் பாதுகாப்பு' என்னும் நூலையும் தமிழில் வெளியிடுகின்ற இந்த விழாவை ஏற்பாடு செய்து அடியேனையும் இதற்குத் தலைமை தாங்குமாறு கேட்டுக்கொண்டதற்கு என்னுடைய மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

"சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் நிறைய நூல்களை வெளியிட்டுத் தமிழ்ப்பணி ஆற்றி வருகின்றார்கள். அதற்கிடையே அறிவியல் நூல்களையும் வெளியிடுவதன்மூலம், கண் பாதுகாப்பு, நரம்பு மருத்துவம், தோல் பாதுகாப்பு, பல் பாதுகாப்பு போன்ற மருத்துவத் துறைகளின் முன்னேற்றத்திற்காகத் தொண்டாற்றுவதை மனமார வரவேற்றுப் பாராட்டுகின்றேன்.

"இன்று இங்கு வெளியிடப்பெறும் இரண்டு நூல்களும் மருத்துவத் தொடர்புடைய அறிஞர்களால் எழுதப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது. ஆகவே, இந் நூல்களில் எழுதப் பட்டிருக்கும் ஒவ்வொரு வாக்கியமும் அறிவியல் அடிப்படையில், அறிவியல் துறைக்குப் பொருத்தமான வகையில் எழுதப்பட்டனவாகும். இப்படிப்பட்ட நூல்கள் மேலும் மேலும் வளர வேண்டும். அதன்மூலம்தான் நம்முடைய அறிவுக்கு முன்னேற்றம் இருக்கின்றது என்பது என்போன்றோரின் நம்பிக்கையாகும்.

"ஆங்கிலத்தில் நிறைய நூல்கள் நாள்தோறும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஆனால், ஆங்கிலம் மட்டுமே தெரிந்தவர்கள்தாம் அவற்றைத் தெரிந்துகொள்ள முடியுமேயன்றித் தமிழ் மட்டுமே தெரிந்தவர்கள் அவற்றின் அடிப்படையைக்கூட அறிந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கின்றனர். ஆக, இப்படிப்பட்ட செய்திகளையெல்லாம் சாதாரண மக்களும் தமிழில் தெரிந்து கொள்வதன்மூலமாகத்தான் ஒரு சமுதாயம் பயன்பெற முடியும்.

"கண் பாதுகாப்பு, தோல் பாதுகாப்புப்பற்றிய செய்திகளை அம் மருத்துவத்தில் ஈடுபட்டிருக்கின்ற மருத்துவர்கள் கூறும்போது தான் அவை சரியாக இருக்கும். இச் சமயத்தில் நான் வேறு ஒரு கருத்தையும் சொல்ல வேண்டும். கண் பாதுகாப்பு, தோல் பாது

காப்பு என்ருல், அஃது இந்தியாவுக்கும் ஒன்றுதான், அமெரிக்கா வுக்கும், ரஷியாவுக்கும், லண்டனுக்கும் ஒன்றுதான். ஆனுல் மற்ற துறைகள் அப்படியல்ல. அவற்றில் குறைபாடுகள் இருக்கத் தாம் செய்கின்றன. பொறியியல் போன்ற துறை நூல்கள் மேல் நாட்டில் எழுதப்பட்டு வருகின்றன. அவற்றைப் படித்துத் தேறிய மாணவர்கள் தாம் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கின்ருர் களா என்பதில் எங்களைப் போன்றவர்களுக்கும் ஐயம் ஏற்பட்டிருக் கின்றது. அவர்கள் தாம் கற்றவற்றை இங்குள்ள சூழ்நிலைக்கேற்ப அந்த அறிவைப் பயன்படுத்துவதில்லை என்று எண்ணவேண்டி யிருக்கின்றது.

''எனவே, இங்கு இருக்கின்ற சூழ்நிலைகட்கேற்பச் சிந்தித்துச் செயல்படவேண்டும். அவ்வகையில் நம் நாட்டிற்குப் பயன்படத் தக்க நூல்கள் நிறைய வெளிவந்தாக வேண்டும். மேல்நாடுகளில் உண்ணத்தக்க உணவுகளைப்பற்றி நம் நாட்டு மக்களுக்கு எடுத்துச்சொல்வோமாஞல் அவற்ருல் அவர்கள் என்ன பயன் அடைய முடியும்? அவற்றுக்குச் சமமாக நம் நாட்டில் கிடைக்கும் உணவுகளைப்பற்றி எழுதும்போதுதான் அதஞல் நம் மக்கள் பயன் அடைய முடியும்.

''ஆக, நம்முடைய சூழ்நிலைகளில் இருக்கின்ற இடர்ப்பாடு களைத் தெரிந்து அவற்றுக்குத் தீர்வுகாண வேண்டியது படித்தவர் களின் முக்கிய கடமையாகும். இது பல்கலைக் கழகங்களின் கடமையாக இருக்கவேண்டும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகின்றேன்.

''இப்படியெல்லாம் படித்தவர்கள்—டாக்டர்கள் பெருமுயற்சி யில் ஈடுபடுகின்றபோதுதான் நாடு நன்னிலை அடையும். கழகத் தாரின் இப்படிப்பட்ட முயற்சிகளுக்குப் பொதுமக்கள் நல்ல வரவேற்பளிக்க வேண்டும். அரசும் வரவேற்கின்றது. எங்களால் ஆன ஆதரவை, இத்தகைய முயற்சிகளுக்குத் தருவோம் என்பதை யும் தெரிவித்துக்கொண்டு, இந்த விழாவில் என்னைத் தலைமை தாங்கக் கேட்டுக்கொண்ட அருமை அன்பர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்து டாக்டர் ஹண்டே அவர்களை இந்த நூல் களை வெளியிடுமாறு கேட்டுக்கொள்கின்றேன்.''

**நூல் வெளியீடல்**

'கண் பாதுகாப்பு', 'தோல் பாதுகாப்பு' என்னுமிரு நூல் களையும் மாண்புமிகு அமைச்சர் டாக்டர் ஹண்டே அவர்கள் வெளியிட அவற்றைத் திரு. வி. ஜி. சந்தோஷம் பெற்றுக்கொண்டார். நூல்களை வெளியிட்டு உரையாற்றிய அமைச்சர் மாண்புமிகு ஹண்டேஅவர்கள், தமது உரையில்,

"நாம் ஆங்கிலத்தில் எவ்வளவு புலமை பெற்றிருந்தாலும் தமிழில்தான் மக்களுடன் தொடர்பு கொள்ள வேண்டிய ஒரு நிலை இருக்கின்றது. அந்தந்த மாநிலங்களில், அந்தந்த வட்டார மொழிகளிலேதான் மக்களோடு தொடர்புகொள்ள முடிகின்றது. மருத்துவம், பொறியியல் போன்ற துறைகளில் நாம் படிப்படியாகத் தமிழைப் பயன்படுத்தக் கூடிய ஒரு கால கட்டத்தில் இருக்கின்றோம். முழுமையாக ஆங்கிலத்தை விட்டுவிட்டுத் தமிழிலேயே பேசக்கூடிய, எழுதக்கூடிய நிலை இன்னும் வரவில்லை; அதற்கேற்ற வகையில் புத்தகங்கள் இல்லை.

"ஒரு காலத்தில் எக் காரணங் கொண்டும் ஆங்கிலத்தை மறந்துவிடாதீர்கள் என்று சண்டை போட்டவன் நான். இப்போதும் முழுமையாக ஆங்கிலத்தைக் கைவிட வேண்டும் என்று சொல்பவனல்லன். மருத்துவம், பொறியியல் போன்ற துறைகளில் நாம் ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதாகத்தான் பலரும் நினைத்துக்கொண்டிருக்கின்றார்கள். உண்மையில் நாம் ஆங்கிலத்தைப் பயன்படுத்தவில்லை. இது பலருக்குத் தெரியாது. மருத்துவத் துறையில் எல்லாச் சொற்களும் இலத்தீன் சொற்களாகத்தான் பயன்படுத்தப்பெறுகின்றன. இதை நாம் புரிந்து கொண்டு எவ்வகைத் தயக்கமும் இல்லாமல் தமிழ்மொழியைப் பயன்படுத்திக்கொண்டு, மாணவர்களுக்கும் சொல்லிக்கொடுக்கும் அதே நேரத்தில் இலத்தீன் சொற்களைப் பயன்படுத்தலாம்.

"மேனாடுகளில் கண்டுபிடிக்கப்படும் கலைச்சொற்கள் இங்கு இறக்குமதி செய்யப்படுகின்றன. நாம் கண்டுபிடித்ததாகப் புதியன எதுவும் வெளிநாடுகளுக்குச் செல்வதில்லை. மொழிக்கு நாம் செலுத்துகின்ற கவனத்தைவிடக் கருத்துகளுக்கு நாம் செலுத்த வேண்டிய கவனம் மிகமிக முக்கியமாக இருக்கின்றது.

"சாதாரண மக்களுக்கு ஒரு கருவியாக—நூலாகப் பயன்படத் தக்கவை இந்த நூல்கள் என்பதில் எவ்வகைக் கருத்து வேற்றுமையும் இல்லை. இஃது ஆரம்ப கட்டம்; இதுபோன்ற புத்தகங்கள் பல இன்னும் தெளிவாகப்—பல அறிஞர்களைக் கொண்டு வெளியிட வேண்டும். இங்ஙனம் இவ் வரிய நூல்களை வெளியிட்டுள்ள கழகத்தாரை நான் பாராட்டுகின்றேன். இந்த விழாவிலே இந்த நூலை வெளியிட வாய்ப்பளித்தமைக்கு என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்" என்று குறிப்பிட்டார்.

### டாக்டர் ஞானதேசிகன்

அடுத்துப் பாராட்டுரை வழங்கிய தமிழகவரசு மருத்துவத் துறை இயக்குநர் டாக்டர் ஞானதேசிகன் அவர்கள் பேசுகையில்,

"இங்கு இந்தப் புத்தகங்களை வெளியிட்ட டாக்டர் சுந்தரம் அவர்களும், டாக்டர் நடராசன் அவர்களும் நம் பாராட்டுதல்களுக்கு உரியவர்களாக இருக்கின்றார்கள். தமிழில் இத்தகைய மருத்துவ நூல்களை வெளியிடுவதன்மூலம் நகரப் பகுதியில் உள்ளவர் மட்டுமின்றிக் கிராமப் புறங்களில் இருக்கும் மக்களும் இந்த நோய்களைப்பற்றியும், அவற்றைத் தடுப்பதுபற்றியும், அவற்றுக்குரிய மருத்துவம்பற்றியும் தெரிந்துகொள்ள முடியும். இத்தகைய பணியில் ஈடுபட்டு நூல்களை வெளியிட்டுள்ள சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரையும், திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களையும் நாம் பாராட்ட வேண்டும், போற்ற வேண்டும்" எனக் குறிப்பிட்டார்.

அடுத்து டாக்டர்கள் பத்ரிநாத், தம்பையா ஆகியோர் கண் பாதுகாப்பு, தோல் பாதுகாப்பு நூல்கள் பற்றியும், அவற்றை இயற்றிய ஆசிரியர்களையும், வெளியிட்ட கழகத்தையும் பாராட்டி ஆங்கிலத்தில் அரிய உரையாற்றினர்.

பின்னர், 95 அகவையுள்ள கண் மருத்துவரும், டாக்டர் சுந்தரம் அவர்களின் தந்தையாருக்கு ஆசிரியராயிருந்தவருமான மூதறிஞர் திரு பி. ஜெ. நாயுடு அவர்கள் டாக்டர் சுந்தரம் அவர்களையும் இம் மருத்துவ நூல்களைச் சிறந்த முறையில் வெளியிட்ட கழகத்தாரையும் பாராட்டிப் பேசினர்.

அடுத்துத் தமிழகச் சட்டமன்ற உறுப்பினர் திரு. இளைய பெருமாள் அவர்கள் பாராட்டுரை வழங்கினர். அவர் தம் உரையில்,

"ஒரு மகிழ்ச்சியான நிகழ்ச்சியிலே கலந்துகொள்வதிலே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரை நான் வாழ்த்துகின்றேன்—பாராட்டுகின்றேன். அவர்களுடைய தொண்டு சைவத்திற்கும், தமிழுக்கும் சிறந்ததாக அமைகின்றதைக் கருதி, அக் கழகத் தலைவரையும், அக் குழுவினரையும் பாராட்ட நான் கடமைப்பட்டிருக்கின்றேன். இத்தகைய வெளியீட்டுப் பணியினை அரசு செய்ய வேண்டும், அப்படி அரசு செய்வதற்கு முன் இதனைச் செய்ய முன்வந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரையும், அதன் தலைவர் அவர்களையும் மீண்டும் பாராட்டுகின்றேன்" என்று குறிப்பிட்டார்.

அடுத்துப் பேசிய திருமதி லட்மி இராசரத்தினம் அவர்கள் இம் மருத்துவ நூல்கள் பள்ளிக்கூடங்களில் மாணவர்க்குத் துணைப்பாட நூல்களாக வைக்கத்தக்கவை என்ற கருத்தை வலியுறுத்தினர்.

டாக்டர்கள் சுந்தரம், எம். நடராஜன் ஆகியோர் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## வாழ்த்துக்கள்

'கண் பாதுகாப்பு', 'தோல் பாதுகாப்பு' ஆகிய நூல்கள் வெளியிட்டமையைப் பாராட்டி அன்பர்கள் பலர் கழகத்திற்கு வாழ்த்துக்களை அனுப்பியுள்ளனர். அவை வருமாறு :

### பாராட்டத்தக்க சீரிய பணி

"சமுதாயத்திற்குத் தேவையான செய்திகளைத் தக்கவர்களைக் கொண்டு திறமையுடன் வெளியிடுவதில், கழகம் என்றுமே முன்னிலையில் இருந்துவருகின்றது. இப்போது அந்தத் தொண்டு தொடர்கின்றது. பேராசிரியர் என். எஸ். சுந்தரம் அவர்களின் சீரிய பணியை நாடு பயன்படுத்திக் கொள்ளும் வகையில் இவ் வெளியீட்டு விழா அமைந்துள்ளது இந்த நற்பணிக்கான காரணகர்த்தா தங்களின் தொண்டுள்ளமே. திருச்சிராப்பள்ளி கண் மருத்துவர்கள் மன்றத்தின் சார்பில் எங்கள் அன்பையும் பாராட்டையும் வாழ்த்துதலையும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

—மருத்துவர் இரா. கலைக்கோவன்,

*செயலாளர், திருச்சி, கண் மருத்துவ மன்றம்.*

### முனைந்துசெய்த திருப்பணிக்கு வணக்கம்

"புத்தம் புதிய கலைகள் தமிழில் வருவதற்கு வகைசெய்யும் நூல்கள், தமிழ்மொழிக்குப் பெரும் பேருதவும். தாங்கள் அகவை முதிர்வையும், நலத்தாழ்வையும் பொருட்படுத்தாமல் முனைந்து இத்தகைய திருப்பணிகளைப் புரிந்து வருவதற்கு என் உளங் கனிந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

—ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார்.

### நாளும் வாழ்க!

*ஒல்லும்நன் வகையெல்லாம் உதவுகின்ற திறனுய்க்தே*
*எவ்வோர்க்கும் எந்நாளும் இனிதாக கனிபயக்கும்*
*பல்மருத்து நூல்பதிக்கும் பைங்கழக வளர்சுடரே*
*நல்லாட்சி யாளநந்தா விளக்கே! நாளும் வாழியவே!*

—புலவர் பொன் முனியப்பன்

*கூவலூர்.*

மற்றும் புலவர்களும், அறிஞர்களும், தமிழ் அன்பர்களும் தம்முடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துள்ளனர்.

———

## 'பதிப்புக் கலைப் பார்வை'-3.

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் 'பாண்டியன் புத்தக சாலை'யில் அரிய பல ஏட்டுச் சுவடிகள் தொகுத்து வைக்கப்பெற்றிருந்தன. அவற்றுள் அச்சிடப்பெற்ற நூலின் சுவடிகளும் இருந்தன. அச்சிடப் பெருத சுவடிகளும் இருந்தன. அச்சிடப்பெற்ற நூலின் சுவடிகளுள், 'திருக்குறள் பரிமேலழகர் உரைச்' சுவடிகள் நான்கு இருந்தன. அச் சுவடிகளுக்கு உரியவர்கள், ஆழ்வார் திருநகரித் திருமேனிக் கவிராயர் வழித்தோன்றிய இரத்தின கவிராயர் மகனுர் தாயவலந் தீர்த்தான் கவிராயர், திருச்சுழியல் சோமசுந்தர கவிராயர், திருநெல்வேலித் திருப்பாற் கடனுதன் கவிராயர், துன்படக்கிக் கோட்டை முத்து வயிரவ நாதப் புலவர் என்பார்.

தமிழ்ச் சங்கச் சுவடிகளை ஆய்வதற் கென்றே புலவர்கள் அமர்த்தப்பெற்றிருந்தனர். செந்தமிழ் இதழாசிரியரும், தமிழ்ச் சங்கக் கல்லூரித் தலைமையாசிரியரும், பிறரும் அத் துறையில் தலைப்பட்டு அயராது உழைத்து வந்தனர். தொடக்க நாளில் செந்தமிழ் இதழாசிரியராக இருந்தவர் பெரும் புலவர் இரா. இராகவ ஐயங்கார் ஆவர். அவர் தாம் ஆய்ந்து கண்ட அரிய குறிப்புகளை 'ஆராய்ச்சி' என்னும் தலைப்பிட்டுச் செந்தமிழில் எழுதிவந்தார். அவர் மேலே குறிப்பிட்ட நான்கு சுவடிகளையும், அச்சிட்ட திருக்குறள் பரிமேலழகர் உரை நூல்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தார். தாம் கண்ட அரியவும் உரியவுமாகிய செய்திகளை அறிஞர்கள் அறிந்து போற்றுமாறும், அடுத்துப் பதிப்பிடுங்கால் பயன்படுத்திக்கொள்ளுமாறும் வெளிப்படுத்தினுர்.

கி. பி. 1812 இல் திருக்குறள் மூலமும் நாலடியார் மூலமும் இணைந்த ஒரு பதிப்பை அம்பலவாண கவிராயர் வெளியிட்டார். சரவணப் பெருமாளையர் உரைப் பதிப்பு 1838 இல் வெளிப்பட்டது; வேதகிரி முதலியார், பரிமேலழகர் உரையுடன் 1849 இல் வெளியிட்டார். இதன் பின்னர் 1861, 1875, 1876, 1891 ஆகிய ஆண்டுகளிலும் பரிமேலழகர் உரைப் பதிப்பு வெளிப்பட்டது. இவற்றுள் ஆறுமுக நாவலர் பதிப்பும் ஒன்ருகும்.

இராமநாதபுரம் திரு. பொன்னுசாமித் தேவர் வேண்டுகோளின் படி, யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலரால், "பல பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்துச் சென்னபட்டணம் வாணி நிகேதன அச்சுக்

கூடிய்த்திலே துன்மதி ஆண்டு வைகாசி மாதம்'' பதிப்பிக்கப் பெற்றது திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் கூடிய நூல். நாவலர் காலம் 1822-1879. இதில் துன்மதி ஆண்டு 1861 ஆகும்.

சீரிய பதிப்புக்குச் செவ்விய அளவுகோல் 'நாவலர் பதிப்பு' என்னும் எண்ணம் பதிப்பாளர் படிப்பாளர் அனைவருக்கும் பதிந்து இருந்ததை இந்நாளைய அறிஞரும் அறிவர். அத்தகைய நாவலர் பதிப்பிலேயே செவ்வைப்படவேண்டிய குறிப்புகள் இருந்தன எனின் ஏனையோர் பதிப்பைக் குறிக்கவும் வேண்டுமோ?

தமிழ்ச்சங்கத்தில் இருந்த பரிமேலழகர் உரைச் சுவடிகளொடும், அச்சிட்ட நூல்களை ஒப்பிட்டு ஆராய்ந்தார் பேரறிஞர் இரா. இராகவ ஐயங்கார். பல சுவடிகளைப் பல நூல்களொடும் ஒப்பிட்டுப் பார்ப்பது போலும் அருஞ்செயல் அரிதே. துன்பமிக்க அப் பணியும், அதனால் உண்டாகும் பயன் கருதி இன்ப மிக்கதாய் அமைந்து எழுச்சியூட்டுகின்றது! இதனை ஆய்வில் தலைப்பட்ட அறிஞர்களே உணர்வர். தினைத்துணை நன்மையையும் பனைத் துணையாக் கொள்வது பயன் தெரிவார் செயலாகலின், பனைத்துணை நன்றியை எளிதில் விடுவரோ?

பதிப்பித்த பரிமேலழகர் உரையில் பல திருத்தங்கள் கிடைக்கக் காண்கின்றார் அறிஞர் இரா. இராகவ ஐயங்கார். அவற்றுள் மூன்றை மட்டும் செந்தமிழில் விளக்கி வரைந்தார்:

> ''நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர்''

என்னும் 320 ஆம் குறள் விளக்கத்தில் பரிமேலழகர் ''உவர் நிலத்து விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவே யாதலின் நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் என்றார்'' என்று அச்சுப் படிகளில் பாடம் இருந்தது. ஆனால், ஏட்டுச் சுவடிப் பாடம் ''உயிர் நிலத்து வினை வித்திட்டார்க்கு'' என்பது. 'உவர்' 'உயிர்' என்பவற்றிலும் 'விளை' 'வினை' என்பவற்றிலும் ஏற்பட்டுள்ள எழுத்து வேற்றுமை சிறிதே எனினும் பொருள் வேற்றுமை எத்துணைப் பெரிதாகின்றது! பின்னதிலுள்ள பொருட்சிறப்பு முன்னதில் எதுவும் இல்லையாய் வறிதாய் ஒழிகின்றதே! ஆராய்ச்சியாளர், ''வெவ்வினை செய்யுமாந்தர் உயிரெனும் நிலத்து வித்தி, அவ்வினை விளையுள் உண்ணும்'' என்னும் சிந்தாமணிச் செய்யுளை எடுத்துக் காட்டும்போது (முத்தி. 164) ஈதன்றோ உண்மைப் பாடம் என்று வியப்புறுகின்றோமே! ''ஈத்துவக்கும் இன்பம்'' என்பதும் ஈதன்றோ! இத் தெளிவு மிக்க பாடத்தைத் தந்தது, துன்படக்கிக் கோங்கிடை ஏட்டுச் சுவடியாம்!

"எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்"

என்னும் 582 ஆம் குறள் விளக்க உரையில் "நிகழ்வன வெல்லாம் என்றது நல்லவுந்தீயவுமாய சொற்களையும் செயல்களையும் அவை நிகழ்ந்த பொழுதே அவற்றிற்குத் தக்கவழியாகத் தேறுதலாகச் செய்ய வேண்டுதலின் வல்லறிதல் என்றும், அவ்விரு தொழிற்கும் அறிதல் காரணமாகலின் அதனையே உபசார வழக்கால் தொழி லென்றுங் கூறினர்" என்பது அச்சிட்ட நூல்களில் கண்ட பாடமாக இருந்தது. ஆழ்வார் திருநகரிச் சுவடியில் 'தக்க வழியாகத் தேறு தலாக' என்னும் பகுதி 'தக்க அளியாகத் தெறலாக' என்று இருக்கக் கண்டார் ஐயங்கார். அச்சுப்படியின் பாடத்தினும் சுவடியின் பாடம் முன்னையோர் மரபின் முத்திரையாய் இலங்குவதைக் கண்டு இன்புற்றார்.

"கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி" (புறம். 29)

"தெறலும் அளியும் உடையோய்" (புறம். 2)

"அளியுந் தெறலும் எளிய வாகலின்" (பெரும்பாண்)

என்பவற்றையும், அவற்றின் உரையையும் எடுத்துக் காட்டி ஏட்டுப் பாடத்தின் இனிமையை நிறுவினார்.

"உப்பமைந் தற்றால் புலவி"

என்னும் 1302 ஆம் குறளுரையில், "புலவி கலவியின்பஞ் செயற்கு வேண்டும் அளவிற்றாதல், உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவை யாக்கற்கு வேண்டுமளவிற்றாதல்" என்று அச்சுப் பாடத்தில் இருந்தது. ஆனால் திருச்சூழியல் ஏட்டுப்படியில், 'இன்சுவை யாக்கற்கு' என்பது 'இன்சுவைய வாக்கற்கு' என்றுண்மையைக் கண்டு மகிழ்ந்தார் இராகவர். உப்பு இன் சுவை யாக்குதலினும், இன் சுவை யுடைய தாக்குதல் தெளிவுடைய தன்றே! "பாலொடு தேன்கலந் தற்றே" என்னுங் குறளில் வரும் "வேறு வேறு அறியப்பட்ட பல சுவையவாய பாலும் தேனும்" என்னும் பரிமேலழகர் உரையைக் கண்டு தெளியுமாறும் சுட்டினார். அச்சிட்ட சுவடிகள் அனைத்தையும் தமக்குக் கிடைத்த ஏட்டுச் சுவ டிகள் அனைத்துடனும் அயராமல் ஒப்பிட்டுக் கண்டு அவர் வெளிப் படுத்தியவை இம் மூன்று உண்மைப் பாடங்களாம்; எஞ்சிய சிலவும் இருந்திருக்கலாம்! ஏட்டுச் சுவடிகளை அச்சிட்ட நூல் களொடு ஒப்பிட்டுப் பார்க்கும் ஒரு மரபு இன்று போற்றப் பெறினும் கூட, இன்னும் சில உண்மைப் பாடங்கள் கிடைக்கக்

கூடும் என்பது பெரும்புலவர் இரா. இராகவ ஐயங்கார் எடுத்துக் காட்டிய அரிய சான்றுகளால் புலப்படுகின்றது. இவ்வாறு அவர் எடுத்துக் காட்டியது கைம்மேல் கனியாகப் பயனுயிற்று என்பதே குறிப்பிடத் தக்கதும் மகிழத் தக்கதுமாம்.

செந்தமிழ் முதற்ருெகுதி பன்னிரண்டாம் பகுதியில் இவ் வாராய்ச்சிக் குறிப்பு வெளிவந்தது. அது சோபகிருது ஆண்டு ஐப்பசித் திங்களாகும். அதற்குப் பின் (1903) அச்சிடப்பெற்ற திருக்குறள் பரிமேலழகர் உரைப்பதிப்புகள் எல்லாம், இத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டு வெளிப்பட்டன. செந்தமிழும், செந்தமிழ் இதழாசிரியரும் செய்த இப் பணி, நாடு தழுவிய பணியாகி மலர்ந்தது. ஆதலால் ஏட்டுச் சுவடிகளை ஆய்ந்து கண்ட உண்மைப் பாடங்களைத் தமிழுலகு அறியுமாறு செய்தலும், செய் வித்தலும் அறிஞர்கள் கடமையாம். இவ்வாறு செய்யாமையால் ஏற்பட்டுள்ள பயனின்மையையும், குறைபாட்டையும் குறுந் தொகைச் சுவடியாய்வு ஒன்றுல் அடுத்த கட்டுரையில் காண்போம்.

(தொடரும்)

---

## நாட்டின் மேன்மை பெண்கல்வி

பெண்கல்வி நாட்டில் எந்த அளவுக்கு உயருகிறதோ, அந்த அளவு நாடு மேம்பாடு அடைகின்றது என்று பொருள். படித்த ஆண்கள் தவருன வழியில் செல்லும்போது படிப்பறியாத பெண்கள் அவர்களைச் சரியான வழியில் திருப்பிவிடுகின்றுர்கள். இந்தக் குடும்ப அறிவை எந்தப் பள்ளியிலும் பயிலாமலே அவர்கள் கற்றுக்கொண்டிருக்கின்றுர்கள், அவர்கட்கு முறையான கல்வியறிவும் கிடைத்தால் சமுதாயம் உயர்வதற்கும் அவர்தம் கால்வழியினர் வாழ்க்கை சீர் பெறுவதற்கும் பெரிதும் பயனுடையதாக இருக்கும்.

—பேரறிஞர் அண்ணு.

# தமிழிலக்கியத்தில் கோம்பி

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

தமிழிலக்கியத்தில் கோம்பி என்ற பெயர் பல்லியினத்தைச் சேர்ந்த பச்சோந்தியின் பெயராக வழங்குகின்றது. சங்க இலக்கியத்தில் ஓந்தியைப்பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. ஆனால் பச்சோந்தியைப்பற்றித் தனியாகக் கூறவில்லை. பெருங்கதையில்தான் முதலில் 'கோம்பி' என்ற பெயர் பச்சோந்தியைக் குறித்து வழங்கியுள்ளது. திருக்கோவையாரிலும் கோம்பியைப்பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது.

பச்சோந்தியைப் பிடித்து அதன் தன்மைகளை நான் ஆராய்ந்துள்ளேன். நான் முதன்முதலில் பச்சோந்தியைத் திருப்பூரில் நொய்யலாற்றங் கரையில் இருந்த அடர்ந்த பசுமை மிகுந்த வேலிப் புதர்களில் கண்டேன். முதலில் அதன் தோற்றத்தையும் சீற்றத்தையும் கண்டு நானே பயந்தேன். ஓந்திகளில் சிலவற்றிற்குச் சூழ்நிலைக்கேற்ப உடல்நிறத்தை மாற்றுந் தன்மை இயற்கையில் உள்ளது. ஆனால், ஓந்தியிலும் வேறான பச்சோந்திக்குச் சூழ்நிலைக்கேற்ப உடல் நிறத்தை மாற்றும் தன்மை சிறப்பாக உள்ளது. பசுமையான சூழ்நிலையில் வாழ்வதால் பொதுவாகப் பச்சை நிறமாகவே பச்சோந்தி காணப்படும். பச்சைநிறத்தைச் சூழ்நிலைக்கேற்ப மாற்றி வேற்றுநிறங்களையும் காட்டும். சமயத்திற்கேற்பக் கொள்கைகளையோ நடவடிக்கைகளையோ மாற்றிக்கொள்பவனைப் 'பச்சோந்தி' என்றழைக்கும் ஆங்கில வழக்குத் தமிழிலும் புகுந்துள்ளது. பச்சோந்தியை ஆய்வுக்கூடத்தில் சீண்டிவிட்டபோது சினங்கொண்டு சீறியது. மெய்சிலிர்த்து உடல் முழுவதும் கறுப்பாகிப் பயமுறுத்தியது. உடல் மேற்பகுதி இரம்பம்போல் சிலிர்த்து அச்சுறுத்தியதைக் கண்டேன். 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' என்று தொல்காப்பியம் (தொல். உரி. 74) கூறுவதைக் கவனிக்கவேண்டும். பச்சோந்தியைப்போல் மிக்க ஒலியெடுத்துச் சீறும் சிற்றுயிரை நான் எனது பட்டறிவில் கண்டதில்லை. ஆனால் பறவைகளில் செம்போத்து என்ற பறவை சீறி ஒலியெழுப்புவதைக் கண்டுள்ளேன். நான் மாகியில் ஆட்சித்தலைவராக இருந்தபோது ஓர் ஆள் மாமரத்தின்மேல் ஏறி இரவில் ஒரு செம்போத்தைப் பிடித்து என்னிடம் காட்டினான். அதை ஓர் அறையில் வைத்திருந்து விடியற்காலையில் விடுவிக்க அருகில் நெருங்கியபோது அந்தச் செம்போத்து சீறிப் பயமுறுத்துவதைக் கண்டேன்.

செம்போத்தைக் கேரளத்தில் மந்திர தந்திரத் தன்மையுடைய பறவையென்று கருதுவதால் அதைக் கொன்று உண்பதில்லை. ஆனால், தமிழ்நாட்டில் செம்போத்தை நுரையீரல் நோய்களைப் போக்கும் மருந்தாகும் உணவென்று கருதிக் கொன்று பெரும்பாலும் அழித்துவிட்டனர். சங்ககாலத்தில் செம்போத்தைப் பற்றித் தனியாகக் குறிப்பிடவில்லை. ஆனால், களவழி நாற்பதில் குக்கில் (5) என்று செம்போத்தைப்பற்றித் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பச்சோந்தியின் மற்றோர் அரிய தன்மை அதன் நாக்கின் செயலாகும். நீண்ட நாக்கைச் சடுதியில் நீட்டிப் பூச்சிகளைப் பிடிக்கும் பச்சோந்தியின் பாங்கு இயற்கை உலகில் அரிதாகக் காணப்படுவதாகும். தடித்த பசைமிகுந்த நாக்கின் நுனியில் பூச்சிகளை ஒட்ட வைத்துப் பிடித்து நாக்கை மடித்து வாய்க்குள் தள்ளும் போக்கு அரிய காட்சியாகும். பச்சோந்திக்கு நீண்டதும் வளைந்ததும் சுற்றி மடிந்ததுமான வால் உண்டு. இந்த வாலைக் கண்டு பயப்படுவதும் இயற்கையே.

*"வரிநிறக் கோம்பி வாலிழிப்பு வெரீஇ*
*எரிமல ரிலவத் திருஞ்சினை யிருந்த*
*அலந்த மஞ்ஞை யாமலி கூவப்"*

*—பெருங்கதை 1 : 55 - 145 - 147*

*"கோம்பிக் கோதங்கிமே யாமஞ்ஞை*
*குஞ்சரங் கோளிழைக்கும்*
*பாம்பைப் பிடித்துப் படங்கிழித்*
*தாங்கப் பணைமுலைக்கே."* *—திருக்கோவையார் 21.*

வரிநிறக் கோம்பி என்றதால் வரிகளையும் நிறத்தையும் மாற்றிக் காட்டும் என்று கொங்குவேளிர் கூறியிருப்பதைக் காணலாம். நானும் முதலில் கொங்குநாட்டில்தான் இந்தப் பச்சோந்தியைக் கண்டேன்.

கோம்பி எனும் பச்சோந்தியின் சுருட்டை வாலைக் கண்டு மயில் பயந்து கூவுவதாகத் தமிழிலக்கியத்தில் பெருங்கதை முதன்முதலில் கூறியுள்ளது. பச்சோந்தியின் வால் அதன் உடலைவிடச் சற்று நீண்டதாகும். ஆனால், அது சுருண்டு காணப்படும். பச்சோந்தியின் வால் மரத்தின் கிளைகளையும் கொப்புகளையும் பற்றிப் பிடிக்கத்தான் உதவுகின்றதே தவிர மயிலையோ பறவைகளையோ வாலில் மாட்டி இழுத்துப் பிடிக்க உதவுவதில்லை என்று இயற்கைச் செய்திகளை ஆராய்ந்த அறிவியலார் உணர்ந்துள்ளனர். நான் செய்த ஆய்விலும்

இந்தச் செய்தி உண்மையில்லை என்று கண்டேன். மாணிக்க வாசகர் திருக்கோவையாரில் கூறிய செய்தி கவனிக்கத் தக்கது. யானையைக் கொல்லும் பாம்பின் படத்தைக் கிழிக்கும் மயில் கோம்பியைக் கண்டு ஒதுங்கும் என்று கூறிய செய்தியைக் கவனிக்கவேண்டும். "பச்சோந்தியைக் கண்டு மயில் தன் கண்ணைப் பிடுங்கிக் கொடுப்பது போல" என்று வழக்குமொழி இலங்கையில் வழங்குகின்றது. மற்றும் தேவாங்கு மயிலை அழுத்திக் கொன்று அதன் மூளையைத் தின்பதாக இலங்கையில் நாட்டுமக்கள் கருதுகின்றனர். பச்சோந்தியைப்பற்றிக் கூறிய செய்தி தேவாங்கிற்கும் கூறப்பட்டதாகத் தெரிகின்றது. பெரிய யானையைக் கொல்லும் பாம்பு இயற்கையில் உண்டு. அடர்ந்த காடுகளில் மரக்கிளைகளில் வாழும் இராசநாகம் சிறியதாயினும் பெரிய யானையையும் கொல்லும். அதை இனங்கண்டு 'அரசரா' என்று புறநானூறு அழைத்துள்ளது. அத்தகைய கொடிய பாம்பையும் பிடித்து அதன் தலையில் உள்ள படத்தைக் கிழித்து மயில் கொல்லும் என்று கூறியது இயற்கைச் செய்தியே. காட்டுமயில் வாழும் சூழ்நிலையில், அடர்ந்த காடுகளில் இராசநாகம் வாழ்வது உண்மையே. இயற்கையில் மயிலுக்குக் கண்பார்வை கூர்மையானது. அதனால் மயிலின் கண்ணைப் 'போழ்கண்' (391) என்று குறுந்தொகை கூறியுள்ளது. ஆதலின் மயில் பாம்பைக் கொன்றுவிடுவது இயற்கைச் செய்தியாகும். தோட்டமும் துரவும் உள்ள பரந்த வீடுகளில் பாம்புகளைக் களைவதற்காகவே மயில்களை வளர்ப்பதைக் கண்டிருக்கின்றேன். மயில் பச்சோந்தியின் வால் சுருட்டையைக் கண்டு கூவுகின்றதா அல்லது பச்சோந்தியைக் கண்டு மயில் பயந்து ஒதுங்குகின்றதா என்பதை இயற்கையில் ஈடுபாடுடைய அறிவியல் அறிஞர்கள் (Naturalists) ஆராய வேண்டும். இச் செய்தி உண்மையா, கற்பனையா என்பதைக் கண்டறியவேண்டும் நஞ்சுடைய பாம்பிற்குப் பயப்படாத மயில் நஞ்சற்ற பச்சோந்திக்கும் அதன் சுருண்ட வாலின் அச்சமுறு தோற்றத்திற்கும் பயப்படுகின்றதா என்பதை நன்கு ஆராயவேண்டும்.

கோம்பி என்ற பெயர் பச்சோந்திக்கு இரண்டே இரண்டு இடைக்காலத்து நூல்களில்தான் வழங்கியுள்ளது. திவாகர நிகண்டில் 'கோம்பல்' என்ற சொல் முன்கோபம் என்ற பொருளில் வழங்கியுள்ளது. அதற்குப் பிற்பட்ட பிங்கலத்தை நிகண்டில் தணியாக் கோபம் என்ற பொருள் கூறப் பட்டுள்ளது. பச்சோந்திக்கு எடுத்தவுடன் முன்கோபமும் தணியாக் கோபமும் வருவதை நான் கண்டிருக்கின்றேன்.

கோம்பு என்பதற்குப் பிங்கலந்தை நிகண்டு 'சினத்தல்' என்று பொருள் கூறியதும் பொருத்தமே. இந்தச் சினக்குறிப்பை உணர்ந்தே 'கோம்பு படைத்த மொழிச்சொல் பரத்தையர்' என்று திருப்புகழில் (263) அருணகிரிநாதர் பாடினர். சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் கோம்பை என்பது ஓர் ஊர் என்றும், கோம்பை நாய் கோம்பை நகரிலுள்ளதும் காவல் புரிவதில் சிறந்ததுமான ஒருவகைச் செந்நாய் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. கோம்பை என்ற ஊரின் பெயரால் கோம்பை நாய் என்ற பெயர் பெற்றது என்பது தவருகும். தணியாச் சினமுடைய நாய் 'கோம்பை' என்ற பெயர் பெற்றதின் காரணமாகவே அது வளர்க்கப்படும் ஊரின் பெயர் தோன்றியதாகக் கொள்ளவேண்டும். கோம்பை நாய் காவல் புரிதற்குரிய சிறந்த வீட்டு நாயும் வேட்டை நாயும் ஆகும். கோம்பை நாயின் குட்டிகூட வீட்டில் வளர்த்தால் வெளியார் யார் வந்தாலும் கடிக்கும். ஆதலின் இதைக் கடிநாய் என்று கூறுவர். தமிழகத்தில் போற்றி வளர்க்கப்பட்ட தூய பிறப் புடைய (True Breed) தனித்தன்மை மிக்க வேட்டை நாய்கள் கோம்பை நாயும் சிப்பிப்பாறை நாயுமாகும்.

கோம்பி என்ற பெயரின் மற்ருெரு பெயராக 'ஓந்திப் பொது' என்று பல்கலைக்கழக அகராதி கூறியுள்ளது தவறு. ஏனென்ருல் கோம்பி ஓந்தியினத்தைச் சேர்ந்ததன்று. கோம்பி என்ற பச்சோந்தியின் பெயர் சினக்குறிப்பால் வந்த பெயர். பச்சோந்தியின் தணியாக் கோபத்தாலும் பயமுறுத்தலாலும் காரணப்பெயராகக் கோம்பி என்ற பெயர் வந்தது. இந்தச் சொல்லைச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி குறிப்பிட் டிருப்பினும் டாக்டர் பர்ரோவும் டாக்டர் எமனேவும் இயற்றிய திராவிடச் சொற்பிறப்பியல் அகராதியில் இச்சொல் காணப் படாதது வியப்பாக உள்ளது. கோம்பியை அறிவியலார் (Chameleon) என்றழைப்பர்.

கருவி நூல்கள்

(1) Dr. Spink—Animals of India

(2) Dravidian Etymoligical Dictionary – Dr. Burrow and Dr. Emeneau.

(3) Madras Lexicon.

———

# திராவிடர்கள்

[க. சி. கமலையா]

(முன் இதழ் ௬௬௧ ஆம் பக்கத் தொடர்ச்சி)

பலுசிஸ்தான் மக்கள் பேசும் பிராகி திராவிட மொழியாகும். அதை வைத்துக்கொண்டு மட்டும் மத்தியதரைக் கடற் பகுதிக்கும் திராவிட இந்தியாவுக்கும் தொடர்பு காணமுடியாது. சிந்துவெளிக் கருகில் பேசப்படும் பிராகி என்ற திராவிடமொழி யில்லையேல் தென்னிந்தியாவில் தழைத்திருக்கும் தூய மொழி பேசும் திராவிட மக்களுக்கும் வட இந்தியாவில் இந்தோ—ஆரிய மொழிகள் பேசினாலும் இனத்தால் பெரும் பகுதியான திராவிட மக்களுக்கு மிடையே தொடர்பு காண்பதில் சிக்கல் உண்டாகும். கிறித்துவ ஊழிக்கு முன்பே கொற்கையில் பாண்டிய அரசு இருந்தது. கிறித்துவ ஊழியின் தொடக்கம் தமிழிலக்கியத்தின் பொற்காலமான சங்க காலம். இயல், இசை, நாடகம் ஆகியவை தழைத்தோங்கி யிருந்த காலம். வடமொழிப் பற்றுக் கொண்டவரும் இந்து சமயம் பற்றியும் தத்துவம்பற்றியும் கலைகள்பற்றியும் பெருமிதத்துடன் எழுதியவருமான ஆனந்த குமாரசாமி திராவிடர்களைப் பற்றி எழுதிய கருத்துரைகளைக் கீழ்க்கண்டவாறு தொகுக்கலாம்:—

(1) திராவிடர்கள் இந்தியாவுக்கு உரித்தானவர்கள். ஒரு காலத்தில் இந்தியா முழுவதிலும் பரவியிருந்தார்கள். கற்காலம் முதல் இன்று வரை பண்பாட்டுத் தொடர்பை உடையவர்கள். கி. மு. 2000 ஆண்டுகட்கு முன்பு இந்தியா முழுவதிலும் சிறு தொகையினராயிருந்தார்கள்.

(2) திராவிடர்களைத் தெற்கு இனத்தவரென்றும் ஆரியர்களை வடக்கு இனத்தவரென்றும் கொண்டு, மலை சாதியினரை அரசர்கள் ஆளுதல், இலிங்க வழிபாடும் தாய்க்கடவுள் வணக்கமும் வைதிக மதத்தில் இடம்பெறுதல், காணுக் கருத்துக்களினின்றும் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொள்ளுதல், இவையனைத்தும் தோற்றவர்கள் வென்றவர்கள்மீது கொண்ட வெற்றியாகும்.

(3) ஆரியர் பண்பாட்டைக் காட்டிலும் மேலும் பழைமையான பண்பாட்டைக் கொண்டவர் திராவிடர். தாய்வழி உறவு செழித்தது.

(4) கிறித்துவ ஊழியின் தொடக்கத்தில் கடல் வழி வாணிபம் உரோமுடனும் கிழக்கிந்தியத் தீவுகளுடனும் இந்தோ

னேசியாவுடனும் செழித்தது. இந்து மதம் அங்கே பரவியது. மீன் பிடிப்புத் தொடர்பான அனைத்துமே திராவிடர்களுடையவை.

(5) இந்தியக் கலையும் பண்பாடும் திராவிட—ஆரியரின் கூட்டுப் படைப்பே.

(6) இந்துப் பழக்க வழக்கங்களின் தொடக்கம் அடிப் படையில் திராவிடர்களுடையது. இந்து மதத்தை இந்தோ—ஆரிய மதம் என்று சொல்வதினும் இந்திய மதம் என்று சொல் வதே பொருந்தும். இந்து மதத்தைப்பற்றிய நூல்கள் ஆரிய மொழிகளிலிருக்கின்றன என்பதைக் கொண்டு நாம் ஏமாந்துவிடக் கூடாது.

(7) கிராமத் தேவதைகள் இனவிருத்தித் தேவதைகளாம் உருவ வழிபாடு, படையல், ஆடல், மோனநிலை, ஆன்மாக்களின் மறு பிறவி ஆகியவை அனைத்துமே திராவிடர்களுடையவை.

(8) தோற்கடிக்கப்பட்ட ஆரியரல்லாத இனத்தவர் ஆரியர் களினும் சிறந்த—வளர்ச்சியுற்றிருந்த பண்பாட்டைக் கொண்டிருந் தனர். அப் பண்பாடு தொன்று தொட்டு நின்றுநிலைத்துவிட்டது.

(9) கலைகளிலும் கைத்தொழில்களிலும் திராவிடர்கள் திறமை யுடையவர்கள். தந்தம், சங்கு, நாட்டுத் தொழில்கள் ஆகியவை ஆரியரல்லாதாரைச் சார்ந்தன.

(10) தென் பகுதியில் திராவிட மொழிகள் பேசப்படு கின்றன. குறிப்பாகத் தமிழ் ஓங்கி வளர்ந்த மொழி; கிறித்துவ ஊழித் தொடக்கத்திலிருந்தே இலக்கிய வளம் கொண்ட மொழி, சமக்கிருதத்தின் ஆதிக்கம் இருந்தாலும் திராவிட மொழிகள் தமக்கே உரித்தான சிறப்புடையவை. எடுத்துக்காட்டாக, எதிர் மறை வினை, சில சிறப்பான ஒலிகள் ஆகியவற்றைச் சொல்லலாம்.

(11) ஆரிய மொழிகளல்லாத மொழிகளின் நூல்களும் கருத்துக்களும் சமக்கிருத இலக்கியத்தில் உள. வேத காலத்து நூல்கள் ஏதும் இல்லை. வேதங்களில் காணப்படாத பழைய செய்திகளும் கதைகளும் பெருமளவில் பின்னர்த் தோன்றிய திராவிடப் பக்தி இலக்கியங்களில் காணப்படுகின்றன. (வேதங் களினின்றும் தனித் தியங்கும் ஆகமங்கள்).[4]

---

4. Ananda K. Coomaraswamy :
   (1) Indroduction to Indian Art.
   (2) History of Indian and Indonesian Art.
   (3) A University Course in Indian Art,

திராவிட நாகரிகம்—பண்பாடு என்பதுபற்றி மிகக்குறைந்த அளவில் ஆனந்த குமாரசாமி எழுதியிருந்தாலும் மிகத் தெளிவாக, ஆழமாக, அமைந்த கருத்துக்கள் அவருடையவை. "இந்தியாவைப் படையெடுத்த மக்களுள் ஆரியர் பெற்ற விளம்பரம் மிகப் பெரிதாகும்'' என்று ரால்ப் லின்டன் எழுதுகின்றார். அவர் மேலும் எழுதுவதாவது: "ஆரியர்பற்றிய நம்பிக்கைகள் சமக்கிருத இலக்கியத்தை ஆழமில்லாது, ஊன்றிப் பார்க்காது ஆராய்ந்ததின் விளைவாகும். பின்னர் நிகழ்ந்த பல படையெடுப்புக்களைப் போலவே ஆரியர் இந்தியாவின்மீது படையெடுத்தமையும், படையெடுத்தவர்களின் படை பலம் முன்பே இருந்த பழைய நாகரிகத்துடன் ஒன்றி அதை மீண்டும் கிளைத்தெழச் செய்தது. தனக்கே உரித்தான இந்திய நாகரிகத்தின் தொன்மை நெடுங்கால வளர்ச்சியின் நிகழ்ச்சி எனச் சொல்லலாம். ஆரியர் வருகையும் சிந்துவெளிப் பண்பாடும் பின்னர் உருவான இந்திய நாகரிகத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாயிருந்து உதவியது என்பதுபற்றி ஐயப்பாடு தேவையில்லை. தென்னாட்டுத் திராவிட மொழிகள் பேசும் மக்களின் நாகரிகம் உறுதியாக ஆரியர்களுடையதன்று என்ற வெகுவான நடைமுறைகளைக் கடைப்பிடித்துக்கொண்டிருக்கின்றார்கள்.''[5]

ஹீன்ரிச் ஜிம்மரும் இதே போன்ற கருத்துக்களைத் தெரிவித்துள்ளார்: "இந்திய மெய்யுணர்வின் வரலாறு இந்தியாவினுள் நுழைந்த வேதகாலத்து ஆரியர்களுக்கும் ஆரியரல்லாதார்க்கும் இடையே நிகழ்ந்த பல மோதல்களினாலும் பழைமையான திராவிட எண்ணக் கோட்பாடுகளினாலும் ஆன்மிக உணர்வாலும் நிரம்பியது எனலாம். ஆரிய—திராவிட இணைப்புக் கொள்கைகள் சீரிய முறையில் வியத்தகு வண்ணம் கையாளப்பட்டு இடைக்கால பௌத்த—பிராமண மெய்யுணர்வுகளையும் நடைமுறைகளையும் உருவாக்கின. அவை இன்றுவரை இந்தியச் சமய வாழ்வின் ஒவ்வோர் அணுவையும் ஊக்குவித்ததோடல்லாது திபெத், சீனா, கொரியா, சப்பான் போன்ற தலைசிறந்த பௌத்த நாடுகளின் போதனைகளுக்கும் கருவூலமாயமைந்தன.''[6]

சிந்துவெளி நாகரிகத்தைப்பற்றி எழுதும்போது 'திராவிட' என்ற சொல்லாட்சியை பெஞ்சமின் ரௌலண்ட் பயன்படுத்துகின்றார். இச் சொல், மொழி—இனம் என்பது பற்றி எதைக் குறிப்பதாயினும் ஆரியர் காலத்துக்கு முந்திய நாட்டுக்கே உரிய இந்திய சமயத்தைக் குறிப்பதாக எழுதுகின்றார். இந்திய நூல்கள் பல சமக்கிருத ஆடை புனைந்ததால் மட்டும் அவை ஆரிய நூல்கள்

5. Ralph Linton: *The Tree of Culture,*
6. Heinrich Zimmer: *Philosophies of India.*

என்று ஆராய்ச்சியாளர் ஏமாந்துவிட மாட்டார்கள். இந்தியா வின் பண்டைய மக்களின் சமயங்கள் ஆகம சமயம் என்றும் வேத (வைதிக) சமயம் என்றும் அல்லது திராவிட—ஆரிய சமயங்கள் எனவும் . சொல்லப்படுகின்றன. கி. மு. மூன்ருவது ஆயிரம் ஆண்டுக் கடைசியில் ஆரியர் வருகைக்கு முன்பு இந்தியாவில் வாழ்ந்த பழங்குடி மக்களின் நம்பிக்கைகள் 'ஆகம', 'திராவிட' என்ற சொற்களால் குறிக்கப்பெறுகின்றன. வெளியிலிருந்து வந்து வெற்றிமாலை சூடியவர்கள் சில சமய அடிப்படைகளைப் புகுத்தி ஞர்கள். நம்பிக்கைகள் கொண்ட பழக்கவழக்கங்கள், மெய்யுணர்வு, தேவதைகள் ஆகியவை நிகழ்கால இந்துமதத்திலுள்ளன. ஆரிய —திராவிட அடிப்படைச் சேர்க்கைகளாலான இம் மதம் வளர்ந்து கி. மு. முதலாயிரம் ஆண்டுகளில் தனிக் கொள்கைகளையும் நம் பிக்கைகளையும் கொண்ட மதமாக மலர்ந்தது. இலிங்க வழிபாடும் தாய்க் கடவுளரும் திராவிடருக்கே உரித்தானவை. பக்தியைக் கொழுகொம்பாய்க் கொண்ட கலப்படமற்ற மானசீகக் கொள்கை களைக் காட்டிலும் (abstract principles) வழிபாட்டுக்குத் தலைசிறந்த இடம் தந்து உருவங்களை அமைத்து அவர்கள் வணங்கினுர்கள். வைதீக அல்லது ஆரியப் பரம்பரைக் கொள்கைப்படி—வானக—மண்ணகக் கடவுளர்கள் பாடல்களாலும் வேள்விகளாலும் கோயில் களோ சிலைகளோ இல்லாமல் வழிபடப்பெற்ருர்கள். கோயில்களில் நிறுவப்பட்ட சிலைகள் குறிக்கும் தெய்வங்களின் வழிபாட்டுச் சிறப்பை வலியுறுத்தி எழுந்த திராவிடச் சடங்கு ஆரியர் முறைக்கு நேர்மாருன வேறுபாடுடையது.[7]

பிற்கால இந்து மதம் எத்தகைய போர்வை புனைந்தாலும் பல ஆரியமல்லாத முறைகளையும் தொடர்புகளையும் எண்ணங்களையும் சிக்கெனப் பற்றிக்கொண்டது. இப்பொழுது கருதப்படுவதைக் காட்டிலும் பன்மடங்கை அரப்பா தன்னதாக்கிக் கொண்டது. சிவன் உருவங்களுக்கு முன்ேடியான உருவங்கள்—ஒருவேளை வெற்றிப் புன்னகையுடன் ஆடும் நடராசன், இலிங்க வழிபாடு, உயிர்களிடம் காட்டப்படும் அன்பு—குறிப்பாக எருது வழிபாடு ஆகியவையெல்லாம் வைதிக மதத்துடன் எந்தத் தொடர்பும் கொண்டவையல்ல. இவை பின்னர் உருவான பிராமணீயத்தின் உறுதியான அடிப்படைகளை எதிர்நோக்கி நின்றனவாகும்.[8]

(தொடரும்)

---

7. Benjamin Rowland : *The Art and Architecture of India.*
8. Mortimer Wheeler : *The Indus Civilization.*

# மாணிக்கவாசகர் கோயில் கட்டினரா?

[பேராசிரியர், மறை. திருநாவுக்கரசு, சென்னை.]

(முன் இதழ் ௬௪௫ஆம் பக்கத் தொடர்ச்சி)

இப் பாடல்களால் பெருமான் அரசன் பணத்தை மறை யோர்க்கும், இறைவன் நாட்பூசை, திருவிழா, கோயில் திருப்பணி ஆகியவற்றுக்கும் அடியார்கட்கும் செலவிட்டார் என்று அறியக் கிடக்கின்றது. இதில் கோயிலைக் குறிக்கும்போது, "செல்வம் நிறைந்த ஆலயம்" என்று குறிப்பிட்டிருப்பதும்,

அரசன் தூதுவர்கள் திருப்பெருந்துறையுற்றுத் திருக் கோயிலின் கோபுர வாசலில் நின்றனர். "அரசன் பொருளால் குதிரைகள் வாங்கிவிட்டீரா?" என்று பெருமானைக் கேட்க, அப்போது கோயிலுக்குள்ளிருந்து பெருமான் கோயிலுக்கு வெளியே போந்து தூதுவர்கட்குச் செய்தி கூறுகின்றார் என்ற விடத்துப் பரஞ்சோதியார் கூறும்,

"சென்று கோபுர வாயிலின் புறம்புபோய்த் திரண்டு
நின்ற வளவன் தமர்களை நேர்ந்தனர் நோக்கா." (60)

இப் பாடல் வரிகளால் பெருமான் திருப்பெருந்துறைக்கு வருவ தற்கு முன்பே அங்கே கோயில் சிறந்த பெரிய நிலையில் இருந்த தென்பதனை அறியலாம். அன்றியும், பெருமான் மதுரையில் இருந்து திருப்பெருந்துறையை நெருங்கும்போதும், பின் கோயி லுட் சென்றதும், கோயிலின் திருச்சுற்று மாளிகையில் வலமாக வரும்போது குருந்த மரத்தின் நிழலில் இறைவனைக் கண்டதும் ஆகிய நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்தும் பரஞ்சோதியார்,

'கோயிலை அடைந்துகுளிர் வான்புனல் குடைந்து
வாயிலை யடைந்துடல் மண்ணுற விழுந்து" (33)

"ஆலய மருங்குவல மாகவரு வார்முன்
மூலமறை ஓதிமுடி யாதபொருள் தன்னைச்
சீலமுனி வோர்தெளிய மோனவழி தேற்றும்
கோலமுற நின்றதோர் குருந்தைஎதிர் கண்டார்" (34)

என்பதால், பெருமான் திருப்பெருந்துறைக் கோயிலைக் கட்ட வில்லை என்பதும், அவர் வருகைக்கு முன்னே அங்குக் கோயில் சிறந்த முறையில் விளங்கி நின்றது என்பதையும் நன்கறியலாம்.

சிவமான பெருமானும் தம் வாசகப் பாடல்களில்,

"திருப்பெருந் துறைஉறை கோயிலுங் காட்டி"

(திருப்பள்ளி எழுச்சி)

"தென்கோயில் வாயிலிற் பிச்சனுக்கினுப்" (ஆனந்தாதீதம்)

"திருப்பெருந் துறையில் நிறைமலர்க் குருந்த
மேவிய சீர் ஆதியே" (அருட்பத்து)

"நீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்"

(திருவம்மானை)

"தேரார்ந்த வீதிப் பெருந்துறையான்" (திருப்பூவல்லி)

என்றெல்லாம் பாடுதலாலும் தெளியலாம்.

இங்ஙனமெல்லாம் புறச்சான்றுகளும், அகச்சான்றுகளு மிருக்கப் பெருமான், அரசன் குதிரை வாங்கத் தந்த பொருளைக் கொண்டு கோயில் கட்டினர் என்று கூறுதல் சிறிதும் பொருந்தா மையும், உண்மையில்லாமையும் நன்கு விளக்குகின்றதன்றோ?

ஆம்! அது பொருத்தமே! ஆனல் மேற்பாட்டுக்களில் (63, 64) காணுமாறு பெருமானர் அரசன் பொன்னை மறையோர், நாட் பூசை, திருவிழா, கோயில் திருப்பணி, அடியார்களுக்குக் "கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையார்க்கு உடைப்பதுபோல்" வழங்கலாமா? அது நேர்மையாமா? முறைகேடல்லவா? என்ற கேள்விக்கு விடை என்ன? என்ற கேள்வி எழுமே! என்னில் கூறுவாம்.

குதிரை வாங்க அரசன் பொன் தந்தான்; பெருமான் அது செய் யாது மேற்கூறியவாறு செலவிட்டார்கள் என்பதற்குப் பெருமானின் திருவாக்கால் ஒப்புதலாம் அகச்சான்று ஒன்றுமில்லையே! அணு வளவுமில்லையே! எல்லாம் பெருமான் காலத்திற்குச் சில பல நூற்றுண்டுகட்குப் பிற்பட்ட திரிபுற்ற செவிவழிச் செய்திகள் தாமே! பெருமான்மீது பழிசுமத்துவோர் கூறும் இப் புறச்சான்று களை அகச்சான்று காணும் அறிஞர்கள் ஒரு சிறிதும் ஏலாரன்றோ?

"அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்குந்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் — திங்கள்
மறுவாற்றும் சான்றோர் அஃதாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்" (நாலடியார்)

என்பதற்கேற்ப இறைவனடியார் தம்பால் அணுவளவு குற்றம் ஏற்படினும் பெரிதும் அழிந்து வருந்துவர். இவ் வுண்மையை அப்பரடிகள் தாம் சமண்சமயச் சார்பில் இருந்தமைபற்றிப் பெரிதும்

நொந்து வருந்திப் பாடியுள்ள பாடல்கள் பலப்பல. அவற்றுள் இரண்டு பாடலடிகள் :

"அமணர்கள் அறவுரை கேட்டல மர்தேன்"

"புள்ளிருக்கு வேளூரானைப் போற்ருதே ஆற்றநாள் [போக்கினேனே."

இவ்வாறே சுந்தரர் பெருமானும் தாம் சங்கிலி நாச்சியார்க்கு அளித்த வாக்கைக் கைவிட்டமைக்காக மிகப்பெரிதும் வருந்திப் பாடிய பாக்கள் பல. அவற்றுள் சான்றுக்காக இரண்டு பாடலடிகள்:

"பிழைஉளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழிஅதனைப் பாராதே படலம்என் கண்மறைப்பித்தாய்"

"சங்கிலிக்கா என்கண் கொண்ட பண்ப!"

இங்ஙனம் தெய்வச் சான்ருேர் தம் குறைகளை விண்டு கூறி நோவதனைப் படுவரே அன்றி அதனை மறைக்கார்.

அரசியல் தலைவர் மட்டுமன்றித் தெய்வ நிகழ் சான்ருேராகிய காந்தியடிகள் தம் தவறுகளைப் பெரிதாகக் கருதி "இமாலயத் தவறு" என்று பெரிதும் வருந்தியுள்ளார்.

இவற்ருல், நம் பெருமானுர் தவறு செய்திருப்பரேல் அதனை மறைக்காமல் பெரிதும் எடுத்துக்கூறி வருந்தி இருப்பாரன்ருே?

ஆனுல், செந்தமிழ் மாமறையின் தெய்வப் பெருமான் தம் பெரும்பிழை, பெருங்குற்றம், பெரும் பாவம் என்றெல்லாம், வருந்தி வருந்தி, அழுது அழுது பாடிய பாடல்களில் செம்பாதிக்குமேல் அக குறைகள் இவை எனக் கூறுகின்ருர். அவற்றிற் சில :

"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே !"

"யானேபொய் என்நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்"

"யான் பாவியேன்———"

"புழுக்கண் ணுடைப் புன்குரம்பைப் பொல்லாக் கல்வி
அழுக்கு மனத்தடியேன்———"

"பொய்யெல்லாம் மெய்யென்று......
மையலுறக் கடவேன்"

"மண்ணாதனிற் பிறந்து எய்த்து மாண்டுவிழக் கடவேனை"

"யான் யாவரினுங் கடையனுய நாயினேன்"

"பொல்லா நாயான நீசனேன்——"

சிவமாம் மெய்ப்பொருளை அறிந்து அடைந்து பேரின்பம் பெருது வாணுளை விணுக்குவதே—அழிதன்மாலைத்தான உலகச் செல்வங்களில், இன்பங்களில் தாம் திளைத்திருத்தலையே குற்றமெனக் கருதி, பெருமான் தம்மைப் பலவிடத்தும் "பொய்யன்" என்று கூறிக்கொள்கின்ருர். இதனை மற்றும் அவர்தம்,

"பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை——"

என்ற மெய்யுரையால் அறியலாம்.

இஃதுணராத் தன்மையே, பெருமான் அரசன் பொருளை நேர்மையில்லா வழிகளில் செலவிட்டார் என்று கருத அகச்சான்ருகின்றதென்னலாம். போதிய சான்றுகளில்லாமல் இவ்வாறு கூறுவது நீதிமன்றத்தில் எடுபடாதே! தம் கருத்தின் வழியே ஐயுற்றுக் கூறுவன அறிவுடைமையாகாது.

தெய்வப் பெருந்தகையார் தாம் திருப்பெருந்துறையில் கடவுட் காட்சி கண்டமைக்கும், சிவபெருமான் தமக்கு மூவகைத் தீட்சைகள் செய்தமைக்கும், தாம் சிவமானமைக்கும் தம் வாக்காலேயே அகச்சான்றுபடப் பாடியுள்ளார். அவர் வரலாற்றிற் காணும் நரிபரியாக்கியது, பரிகளைப் பாண்டியனிடம் இறைவன் குதிரைச் சேவகனுகி ஒப்படைத்தல், வைகை வெள்ளம், வந்தியின் பேறு, சிவபிரான் மண்சுமந்து பிரம்படிபட்டது முதலாம் நிகழ்ச்சிகளுக்குப் பெருமானுடைய பாடல்களில் குறிப்பான அகச்சான்றுகள் உள்ளன. இவை தெளிவுபடவில்லை. ஆயினும் அவற்றைக் கொண்டும் செவிவழிச் செய்திகளைக் கொண்டும்தான் பெருமானைப் பற்றிய புராணங்கள் எழுந்தன. இவற்றைவிட மேலே சொன்ன அகச்சான்றுள்ள பாடல்களில் பெருமானின் வரலாற்று நிகழ்ச்சிகளே உலகில் எங்கும் காண ஒண்ணுச் சிறப்பினவாம் என்றறிதல் வேண்டும். இவையே பெருமானுடைய தெய்வத் தன்மைக்குப் போதுமான சான்றன்ருே?

ஆகவே, இதுவரை ஆய்வு செய்யப்பட்டதிலிருந்து, பாண்டியன் குதிரை வாங்கப் பெருமானிடம் பெரும் பொருள் கொடுத்தது, அவர் அது செய்யாது அப் பொருளைக் கொண்டு கோயில் கட்டியது முதலாம் செய்திகட்கு ஒரு சிறிதும் ஆதாரங்கள்—சான்றுகள் இல்லை என்பதை நன்கறியலாம்.

———

# ஆடுதல்—சொல்விளக்கம்

[பேராசிரியர் இரா. மதிவாணன் க. மு.]

ஆடு—தல் āḍu—, செ. கு. வி. (v. intr.) 1. அசைதல் to move, to wave, to swing, to shake, to vibrate. ஆடு கழை. 2. கூத்தாடுதல்; to dance, to gesticulate, to play. (பிங்.) அம்பலத்தாடுவான் (பெரியபு. கடவுள்). 3. விளையாடுதல்; to play. அகன்மலையாடி (மணி. 10, 55). 4. நீராடுதல்; to bathe, to play in water. பூக்கமழ் பொய்கை யாடச் சென்றேன் (மணி. 17, 32). 5. பொருதல்; to fight. மற்றவனோ டாடி மாய்ந்ததனை (கந்தபு. சிங்கமு. 460). 6. அலைதல், திரிதல்; to go, to proceed, to wander about, to pass to and fro. ஆடித் திரிந்து நான் கற்றதும் கேட்டதும் (தாயு. சச்சிதா. 5). 7. முயலுதல்; to practise, to persevere, to make continued exertion. இளையானே ஆடுமகன் (பழமொ. 150). 8. பிறத்தல்; to be born. மாசை மாக்கடன் மன்னவ னுடலின் (சீவக. 911). 9. உலாவுதல்; to wander. இளமழை யாடும் (கலித். 41). 10. சுற்றிவருதல்; to rotate. பம்பரம் ஆடுகிறது. 11. சண்டையில் திரிதல்; to move as if in a fight. வருந்தி ஆடினுள் பாடினுள் (ஔவை. தனிப்பா.) 12. அளவுக்கு மீறி அதிகாரஞ் செய்தல்; to over-rule. ஒரேயடியாய் ஆடாதே (உ. வ.) 13. மனந்தளர்தல்; மனங்குழம்புதல்; to vacillate, te be confused or disspirited. ஆடிய உள்ளம். 14. வலி தளர்தல்; to become weak. பல் ஆடிப்போயிற்று (உ. வ) 15. ஒலித்தல்; to throb. வண்டாடும் பூம்பொழில். 16. துடித்தல்; to quiver. வாட் கண்ணிடனாட (பு. வெ. மா.) 17. குலுங்குதல்; to shudder, to tremble. கையில் வளையாடுகிறது.

—செ. குன்றா. வி. (v. tr.) 18. சொல்லுதல்; to tell. அவர் சொல்லியவாறே யாடினார் (திருவிளை. விறகு. 61). 19. செய்தல்; to do perform. அமராடுதல் to fight. (பிரபோத. 27, 21). 20. நுகர்தல்; to enjoy. (சிலப். பதிக. 16). 21. பூசுதல்; to rub, to smear with sandal paste. சந்தனம் ஆடிய மேனி. 22. அளைதல், துழாவுதல்; to mix, to stir. வண்டு தேனாடியது.

—ம. வி. (idio—u.) 23. அசைந்தாடுதல்—மெல்லச் சாய்ந் தாடுதல்; to sway. தென்றலில் பூங்கொடி அசைந்தாடுகிறது.

24. ஆலையாடுதல்—ஆலையிலிட்டு அரைத்தல்; to crush in a machine. இன்றுதான் கரும்பு ஆலையாடி முடிந்தது. 25. இணைலாடுதல்—புணர்தல்; to copulate, as snakes do; பாம்பு இணைலாடுகிறது. 26. ஈயாடுதல்—ஈமொய்த்தல்; to swarm about. இனிப்புள்ள இடத்தில் ஈயாடும். 27. ஈயாடாமை—பொலிவின்மை; to show no emotion. அவன் முகத்தில் ஈயாடவில்லை. 28. உண்டாடுதல்—விருந்துண்டு மகிழ்தல்; to revel. உண்டாடும் செல்வரா நாம்? 29. உரையாடுதல்—கலந்து பேசுதல்; to converse. அவரோடு நாங்கள் உரையாடினோம். 30. உறவாடுதல்—நட்புக் கொள்ளுதல்; to become friendly. பகையாளியை உறவாடிக் கெடு. 31. ஊடாடுதல்—இடைப்புகுதல்; to intervene. ஐயம் ஊடாடாத நட்பு. 32. எண்ணெயாடுதல்—செக்கிலிட்டு அரைத்தல்; to press oil. ஒரு மூட்டை எள்ளை எண்ணெயாடினர். 33. எதிராடுதல்—எதிர்த்துப் பேசுதல்; to oppose. என்னோடு எதிராட உனக்கென்ன துணிச்சல்?; 34. ஒப்புக்கு ஆடுதல்—பற்றுள்ளவன் போல் நடித்தல்; to behave as if interested. அவன் ஒப்புக்கு ஆடுகிறான்; நம்பாதே. 35. ஒளிந்தாடுதல்—நம்பிக்கையூட்டி ஏமாற்றுதல்; to deceive by giving hope. இந்த ஒளிந்தாட்டமெல்லாம் என்னிடம் செல்லாது. 36. ஒடியாடுதல்—விரைந்து செயற்படல்; to act vigorously. அவரால் முன்னைப் போல ஒடியாட முடியாது. 37. ஓடியாடுதல்—அலைந்து வேலை செய்தல்; to run, hither and thither, work hard. இளமைக் காலத்தில் ஓடியாடிச் சம்பாதித்தார். 38. (அ) ஓரியாடுதல்—தன்னை எவரும் தொடமுடியாதபடி நீருள் மூழ்கியும் நீந்தியும் நெடுநேரம் விளையாடுதல்; to play in water by diving and swimming so as to make it impossible for others to catch him; ஓரியாடுதலில் அவன் வல்லவன். (ஆ) ஓரியாடுதல்—துணைக்கு எவருமின்றித் தானே வருந்திப் பணியாற்றுதல்; to work all alone without help. அவளொருத்தியே ஓரியாடுகிறாள்; யாராவது துணைக்குப் போகக்கூடாதா? 39. கடலாடுதல்—விழாவின்போது கடலில் நீராடுதல்; to bathe or swim in the sea. இந்திர விழாவின்போது மக்கள் கடலாடுவர். 40. கண்டவனோடாடுதல்—கண்டவர்களோடு பழகுதல்; to move with worthless people. கண்டவனோடாடிச் செல்வமெல்லாம் தொலைத்துவிட்டான். 41. கண்ணாமூச்சியாடுதல்—ஒளித்து வைத்துப் பேசுதல்; to pretend to know nothing, though knows everything, to play hide and seek. என் புத்தகம் எங்கே சொல், என்னோடு கண்ணாமூச்சியாட வேண்டாம். 42. (அ) கயிறாடுதல்—கயிற்றின்மேல் நடக்கும் கழைக்கூத்தாடுதல்; to

perform on stretched wire. ஆரியர் கயிருடு பறையின் (குறு. 7, 4). (ஆ) கயிருடுதல்—கயிற்றின் இரு முனைகளையும் இரு கைகளில் பிடித்தவாறு மேல் கீழாக வீசிச் சுழற்றிச் சிறுமியர் குதித்தாடும் விளையாட்டு; to play with skipping ropes. அவள் நன்ருகக் கயிருடுகிருள். 43. களித்தாடுதல்—பெருமகிழ்ச்சியடைதல்; to rejoice. பிறந்த நாளன்று மாமா பரிசுப் பொருள்களோடு வரக்கண்டு குழந்தைகள் களித்தாடினர். 44. கழையாடுதல்—கழைக்கூத்தாடுதல்; to dance on a pole. அவன் கழையாடலில் வல்லவன். 45. காலாடுதல்—செல்வமுடையராதல்; to become rich. காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து மேலாடு மீனின் பலராவர் (பழ.) 46. (அ) காற்ருடுதல்—காற்று வீசுதல்; to blow. இன்று கொஞ்சமும் காற்ருடவில்லை; (ஆ) காற்ருடுதல்—உலர்தல்; to dry in the wind. ஈரத்துணியைக் காற்ருடப் போடு. 47. குடித்தாடு; மதுவருந்திச் செல்வம் அழித்தல்; to squander wealth through drinking. அவன் சொத்தெல்லாம் குடித்தாடிவிட்டான். 48. குறையாடுதல்—விலை குறைக்குமாறு கெஞ்சிக் கேட்டல்; to ask repeatedly to lower the price. நாளெல்லாம் குறையாடினுலும் விலை குறையாது. 49. கூத்தாடுதல்—மகிழ்ச்சியிற்றிளைத்தல்; to rejoice in happiness. முதல் வகுப்பில் தேறியதற்காக ஒரேயடியாகக் கூத்தாடுகிருன். 50. கெஞ்சிக் கூத்தாடுதல்—இடைவிடாமல் குறையிரந்து கேட்டல்; to beg, to request repeatedly. நீ என்னதான் கெஞ்சிக் கூத்தாடினுலும் அவன் தரப்போவதில்லை. 51. கையாடுதல்—பணம் மோசடி செய்தல்; to swindle money. அவன் ஒரு பெருந்தொகையைக் கையாடிவிட்டான். 52. (அ) கொண்டாடுதல்—புகழ்தல்; to praise. கொடுப்பவனை எல்லாரும் கொண்டாடுகின்றனர். (ஆ) கொண்டாடுதல்—விழாச் செய்தல்; to celebrate a festival. நாங்கள் பிறந்த நாள் கொண்டாடினேம். 53. கோலாடுதல்—அடித்தல்; to beat with a stick. கோலாடினுல் குரங்காடும். 54. சதையாடுதல்—பாச உணர்வு வெளிப்படுதல்; to express feeling of affection, attachment; தன்னை மதிக்காத மகனென்ருலும் அவன் நோய்வாய்ப்பட்டதறிந்து தந்தை கதறுகிருர். தானுடா விட்டாலும் தன் சதையாடுகிறது. 55. (அ) சாமியாடுதல்—மருளேறியாடுதல்; to speak and act as if possessed by a spirit. அவன் நேற்றுச் சாமியாடினுன். (ஆ) சாமியாடுதல்—அலைக்கப்படுதல்; to undergo suffering frequently. எனக்கு ஒன்றுந் தெரியாதென்று ஏய்க்கப் பார்க்கிருன். அவனைச் சாமியாட வைக்கிறேனு இல்லையா பார். 56. சீருடுதல்—பிணங்கிக்கொள்ளுதல். to get angry and quarrel.

அவள் சீருடிக்கொண்டு தாய்வீட்டுக்குப் போய்விட்டாள் 57. சும்மா ஆடுதல்—காரணமின்றிப் பேசுதல் அல்லது செயற்படுதல்; to speak or act without reason. கண்டவன் பேச்செல்லாம் கேட்டு இப்படிச் சும்மா ஆடாதே. 58. சூறையாடுதல்—கொள்ளையடித்தல்; to rob, to plunder. திருடர் புகுந்து அவன் கடையைச் சூறையாடிவிட்டனர். 59. சொல்லாடுதல்—பேச்சுக் கொடுத்தல்; to converse. அவனோடு சொல்லாடிப்பார். 60. சோற்றுக்கு ஆடுதல்—சோற்றுக்காகச் சொன்னபடி செய்தல்; to do anything just to eke out a living. அவன் சோற்றுக்கு ஆடுகிறவன். 61. சோற்றுக்குத் திண்டாடுதல்—வறுமையில் வாடுதல்; to starve and suffer from poverty. அவன் சோற்றுக்குத் திண்டாடுகிறான். 62. தலை கால் தெரியாமல் ஆடுதல்—செருக்குடன் நடத்தல்; to behave with pride. திடீரென்று பணக்காரனாகிவிட்டதால் அவன் தலை கால் தெரியாமல் ஆடுகிறான். 63. தலைமேல் வைத்துக் கொண்டாடுதல்—அளவுக்கு மீறிப் போற்றுதல்; to praise excessively; தொடக்கத்தில் அவரே என் தலைவர் என்று தலைமேல் வைத்துக் கொண்டாடினான். 64. தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டு ஆடுதல்—கட்டுக்கடங்காத பற்றால் அடிமையாதல்; to shower love in excess and become a slave. திருமணமான புதிதில் அவளைத் தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டு ஆடினான். 65. தலையாடுதல்—தலை நடுங்குதல்; shaking of head because of oldage. அந்த மூதாட்டிக்குத் தலையாடுகிறது. 66. தலைவிரித்தாடுதல்—மிகுப் பரவி மேலோங்கி நிற்றல்; to dominate by widely spreading. எங்கும் வேலையின்மை தலைவிரித்தாடுகிறது. 67. திக்குமுக்காடுதல்—திணறுதல்; என்ன செய்வதென்றறியாமல் திக்குமுக்காடுகிறான். 68. திண்டாடுதல்—எய்தப் பெறாது வருந்துதல்; to lament for not acquiring. செலவுக்குக் காசில்லாமல் திண்டாடினான். 69. திருமுழுக்காடுதல்—தெய்வத் திருமேனியை முழுக்காட்டுதல்; to ceremoniously immerse an idol in water. இறைவன் திருமுழுக்காடுங் காட்சி அடியார்க்கு இன்பந்தரும். 70. நகையாடுதல்—எள்ளி நகைத்தல்; to laugh derisively. (தொடரும்)

---

## திருத்தம்

செல்வி ௩௭—பரல் ௫0, ௪௬0ஆம் பக்கத்தில் 26ஆம் வரியில் "இந்தித் திணிப்பு" என்றிருப்பதை "இந்தி எதிர்ப்பு" என்று திருத்திப் படித்துக்கொள்ளுமாறு அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

—ஆசிரியர்

# பிள்ளையார்பட்டி குடைவரைக் கோயில்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்

*இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை); திருநெல்வேலி]*

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூரினின்றும் காரைக்குடி செல்லும் வழியில் பிள்ளையார்பட்டி என்னும் சிற்றூர் உள்ளது. ஈக்காட்டூர், மருதங்குடி மற்றும் திருவீங்கைக்குடி என்று அழைக்கப்பெற்ற இவ்வூர் இங்குள்ள பிள்ளையாரால் இக்காலத்தில் பிள்ளையார்பட்டி என வழங்கப் பெறுகின்றது.

பொதுவாகக் குடைவரைக் கோயில்களின் முகப்பு, தூண்கள் மற்றும் அரைத்தூண்களைக் கொண்டனவாக இருக்கும். அவற்றின் இருபுறமும் உள்ள புரைகளில் புதைசிற்பங்கள் காணப்படும். ஆனால், இங்கு முகப்பில் வடக்கு நோக்கிப் பிள்ளையார் உருவாக்கப்பட்டுள்ளார். இரு கைகள் தாம் உள்ளன. வலக் கையில் மோதகம் இருக்க, இடக்கை இடுப்பில் ஊன்றிய நிலையில் உள்ளது. முற்கால வடிவங்களைப் போன்று, இவரது துதிக் கையும் வலப்புறமாக உள்ளது. எனவே வலம்புரி விநாயகர் எனப் படுகின்றார். மார்பில் முப்புரிநூல் இல்லை. வயிற்றை மூன்று பட்டையாலான 'உதரபந்தம்' என்ற அணி அழகுபடுத்துகின்றது. இவர் தவஇருக்கை நிலையில் உருவாக்கப்பட்டுள்ளார். காது விரிந்து செதுக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் உள்ள பிள்ளையார் வடிவங்களில் இது காலத்தால் முற்பட்டதாகக் கொள்ளப்படு கின்றது.

குடைவரையின் உள்ளே கருவறை கிழக்கு நோக்கி அமைந் துள்ளது. கருவறையின் முகப்பில் 3 பருமனான தூண்கள் மேலும் கீழும் சதுரமாகவும் நடுவில் எட்டுப்பட்டை கொண்டனவாகவும் காணப்படுகின்றன. வட்டமான போதிகைகள் தரங்க அமைப் புடனும் நடுவில் பட்டையுடனும் உருவாக்கப்பட்டுள்ளன. தூண் களில் உள்ள சதுரங்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட் பட்டுள்ளன. ஏனைய பாண்டிய குடைவரைகளைப்போன்று, இங்குள்ள இலிங்கத் திருவுருவும் பாறையின் ஒரு பகுதியே. இவரது திருப்பெயர் திருவீங்கைக்குடி மகாதேவர் என்பதாம் கருவறையின்மீது வட்டமான விமானம் அமைக்கப்பெற்றுள்ளது.

பிள்ளையாருக்கும் இலிங்கத்திருவுருவிற்கும் இடையில் உள்ள உருவம் பல்லவ மன்னனாகக் கொள்ளப்பட்டு வந்தது. பல்லவர் களது ஆட்சி திருச்சிவரை இருந்தமைக்கே சான்றுகள் உள்ளன. மேலும் இங்குப் பாண்டியர்கள் பாணியில் உள்ளதுபோன்று இலிங்கத் திருவுரு பாறையில் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. எனவே இது பல்லவ மன்னன் அன்று, அரி அரன் என டாக்டர் நாகசாமி கருத்துத் தெரிவித்துள்ளார். முற்கால வடிவங்களில் உள்ளது போன்று, இந்த வடிவம் அணிந்துள்ள முப்புரிநூல் பட்டையாகவும், வலக்கைமீதும் காணப்படுகின்றது. வலக்கை வரதமுத்திரையிலும் இடக்கை இடுப்பில் ஊன்றியும் உள்ளன.

கருவறையை ஒட்டி வடபுறத்தில் இலிங்கோற்பவர் காணப் படுகின்றார். இலிங்கத்தில் சிவபாகத்தில் நடுவில் சிவன் அமைந் திருப்பதுதான் பொதுவாக இலிங்கோற்பவ வடிவம் எனப்படும். இதினின்றும் மாறுபட்டுக், குன்றக்குடி, திருமெய்யம் குடைவரைக் கோயில்களில் உள்ளதுபோன்று இங்கும் சிவன் இடுப்புவரை உருவாக்கப்பட்டுள்ளார். அதன்கீழ் தூண் அமைக்கப்பெற் றுள்ளது. திருமாலும், பிரமனும் காணப்படவில்லை. சிவனே முழுமுதற்பொருள் என்பதை வலியுறுத்தும் இலிங்கோற்பவ வடிவம் குடைவரைகளில் அமைக்கப்பெற்றதினின்றும் சைவம் அக்கால மக்களிடையே நன்கு பரவியிருந்தமை தெளிவாகின்றது.

இங்கு நடைபெறும் விழாக்களில் விநாயகர் சதுர்த்தி தனிச் சிறப்புடையது. தம்மை நோக்கிச் சிரித்த சந்திரனைப் பிள்ளையார் வசவுரை கூறினார் என்றும், வசவுரையினின்றும் நீங்கச் சந்திரன் விநாயகரை ஆவணித் திங்கள் வளர்பிறையில் சதுர்த்தியன்று வணங்கியதாகவும் புராணம் கூறுகின்றது. விநாயகர் சதுர்த்தியன்று பிள்ளையார்பட்டி வரும் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு குடம் கொண்டு வருகிறாள். அதில் வெள்ளியிலான பிள்ளையாரை இட்டுத் தண்ணீர் நிரப்பிப், பூசிக்கின்றாள். இதனால் தமக்கு ஏற்படும் வீண் பழிப்புரைகள் நீங்கும் என்பதும், வேண்டியவாறு பெறலாம் என்பதும் அவர்களது அசைக்க முடியாத நம்பிக்கை.

இங்குள்ள குடைவரைக்கோயில் பல்லவப்பேரரசன் மகேந்திர வர்மன் பாணியில் அமைந்துள்ளது. எனவே, இதன் காலத்தை 7 - 8ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

———

# இசைக்குயில் கே. பி. சுந்தராம்பாள்

[மா. சு. சம்பந்தன்]

இற்றைக்கு ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகட்குமுன், இசைத் தட்டுகள்மூலம் தமிழகமெங்கும் தமிழ்ப் பெண்மணி ஒருவரின் இனிய



குரலோசை கேட்கத் துவங்கிற்று. கேட்போரின் உள்ளத்தில் நாட்டுப்பற்றையும், நல்ல தமிழ்ப்பற்றையும் பக்தி உணர்வையும் ஊற்றெடுக்கச் செய்த அந்த ஏழிசை வல்லபி—இசைக்குயில் திருமதி. கே. பி. சுந்தராம்பாள் என்பதை யாரும் மறக்கவோ மறுக்கவோ இயலாது.

கொடுமுடி என்னும் ஊரில் 1902ஆம் ஆண்டில் ஓர் எளிய குடும்பத்தில் தோன்றியவர் சுந்தராம்பாள். இளமையிலேயே தமது இனிய குரலால் கேட்போர் உள்ளத்தை இசையவைத்த இவ்வம்மையாரை நாடக உலகம் தேடிக் கைகொடுத்து உதவிற்று. பாடகியாக மட்டுமன்றி விரைவில் ஒரு நடிகையும் ஆனார். எனினும் அக்கால நாடக மேடைகள் சுந்தராம்பாளின் நடிப்பைக் காட்டிலும் இசையினையே பெரிதும் விரும்பி வரவேற்றன.

இசைவல்லாரை இசைவல்லார் காமுறுதல் இயல்பேயன்றோ! எனவே, அக்கால நடிகரும் சிறந்த பாடகருமான எஸ். ஜி. கிட்டப்பா, திருமதி சுந்தராம்பாளின் இசைத் திறத்தில் மயங்கி, அவரைத் தமது வாழ்க்கைத் துணைவியாக 1926இல் ஏற்றுக்கொண்டார். இருவரும் சேர்ந்து நடிக்கத் துவங்கினர்.

சுந்தராம்பாளின் இசைத்திறன் தமிழகமட்டுமன்றி இலங்கை, இரங்கூன், மலேசியா, சிங்கப்பூர் ஆகிய தமிழர் வாழும் அயல்நாடுகளிலெல்லாம் பரவத் துவங்கிற்று. இவ்விருவரின் நாட்டுப்பாடல்களும் (தேசியப் பாடல்கள்) பக்திப் பாடல்களும் மக்களிடையே பெரும் செல்வாக்கினைப் பெற்றன.

இங்ஙனம் இசையுலகில் சிறகடித்துப் பறந்த இசைக்குயிலின் வாழ்விலே கருமேகம் சூழத்துவங்கிற்று. கிட்டப்பா—சுந்தராம்பாள் உறவில் ஓரொருகால் பிணக்கு நேர்வதும் பின்னர்த் தீர்வதுமான நிலை ஏற்பட்டது. இந்நிலையில் இளைஞர் கிட்டப்பா பொல்லாத குடிப் பழக்கத்திற்கு ஆளாகி உடல்நலங்கெட்டு, இளமையிலேயே காலமானார். சுந்தராம்பாள் வாழ்க்கையில் இத் துயர நிகழ்ச்சி ஒரு பெரும் மாறுதலை உண்டுபண்ணிற்று. அவர் தனிமரமானார்! நாடக உலகையே வெறுத்தார். இனி யாருடனும் நடிப்பதில்லை என்று உறுதி பூண்டார். சுருங்கக் கூறின் அவரது வாழ்க்கை ஒரு துறவு வாழ்க்கையாகவே மாறிற்று எனலாம்.

எனினும் கலையுலகம் அவரை விட்டபாடில்லை. திரைப்படத்திற்கு ஈர்த்தது. மீண்டும் நடிக்கத் துவங்கினார். ஆண்வேடம் பூண்டு நந்தனாராக, துறவுக்கோலம் பூண்டு மணிமேகலையாக, பக்தியின் வடிவாகிக் காரைக்கால் அம்மையாராக—பௌத்தத் துறவிக்கோலத்தில் கவுந்தி அடிகளாகத்—தமிழ்மூதாட்டியாகி ஔவையாராக இவ்வாறெல்லாம் தம் இயல்பிற்கேற்பத் திரைப்படங்களில் நடித்துப் பெரும் புகழும், பொருளும் பெருக வாழ்ந்தார்.

நந்தனாராக நடித்த இவர் அதற்கெனப் பெற்ற ஊதியம் ஒரு நூறாயிரம் உருபாயாகும். இஃது அந்நாளில் பிற நடிகர்கள் யாரும் பெறாத பெருந்தொகையாகும். இத்துணைப் புகழ்க்கிடையிலும் அவர் இகழப்பட்டதுண்டு. அந்நாளில் ஆனந்தவிகடன் இதழில் திரு. கிருட்டிணமூர்த்தி என்பார் (கல்கி) இவரை இழித்தும் பழித்தும் எழுதினார். என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

அம்மையார் பிற்காலத்தில் இசையரங்குகளில் மட்டும் பாடுவதையே தொழிலாகக் கொண்டார். பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடுவார். அங்ஙனமே தேசியப் பாடல்களை விடுதலை உணர்வோடு பாடுவார். அவருடைய பாடல்கள் செவிக்கு மட்டுமின்றிக் கேட்போரின் சிந்தைக்கும் விருந்தளிக்கும் சீரிய பாடல்களாய் அமைந்தன.

1947இல் தமிழக வரசின் தமிழ் வளர்ச்சித்துறையினர் இவரைப் பாராட்டிச் சிறப்புச் செய்தனர். 1955 சென்னை மாநகராட்சியின் சார்பில், இவர்தம் நாட்டுத் தொண்டினைப் பாராட்டி வரவேற்பொன்று திரு. கே. என். சீனிவாசன் அவர்கள் தலைமையில் வழங்கப்பெற்றது. பின்னர் இந்தியப் பேரரசு தாமரைத்திரு (பத்மஸ்ரீ) என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தது. 1980இல் தமிழ்நாடு இயல்—இசை—நாடக மன்றத்தினர் 'தனிப்பெருங் கலைஞர்' என்னும் விருதினை வழங்கிச் சிறப்பித்தனர்.

இங்ஙனம் பல்லாற்றானும் இசையுலகின் ஒளிவிளக்காய்த் திகழ்ந்த இசைக்குயில் அம்மையார் 24—9—1980இல் தமது 78ஆவது அகவையில் மறைந்தார்.

பின்குறிப்பு :

இவர்தம் ஆற்றலைப் போற்றி நினைவுகூரும் வகையில் 18—6—1981 அன்று தென் கலை வளர்ச்சி மன்றத்தின் சார்பில் சென்னைக் கந்தகோட்ட மணிமண்டபத்தில் ஒரு கூட்டம் நடைபெற்றது. முன்னாள் நகரத் தந்தை திரு. கே. என். சீனிவாசன் தலைமை தாங்கினார். சட்டமன்றத் தலைவர் மாண்புமிகு கே. இராசாராம் சுந்தராம்பாளின் படத்தைத் திறந்து வைத்து அரிய உரையாற்றினார். திரு. கு. சா. கிருட்டிணமூர்த்தி, குருவாயூர் பொன்னம்மாள் ஆகியோர் பேசினர். திரு. மா. சு. சம்பந்தன் அவர்கள் நிகழ்த்திய வரவேற்புரையில், திருமதி. சுந்தராம்பாளின் பெயரில் ஓர் அறக்கட்டளை நிறுவி அதனைப் பேணி வளர்த்தல் தமிழக அரசின் கடமையாகும் என்றார். திரு. ஊ. செயராமன் நன்றி நவின்றார்.

— —

# பேராசிரியர் திரு. அ திருமலை முத்துசாமி அவர்கள் மறைவு

நூலக இயலைத் தமிழ்மக்களுக்கு எளிதில் விளங்கவைத்த நூலகக் கலாநிதி, தமிழ்ப் பேரறிஞர், சைவநெறிக் காவலர் திரு. அ. திருமலை முத்துசாமி, எம்.ஏ., பி.டி., எம்.லிப். எஸ்ஸி, (பி.எச்.டி.) அவர்கள் மதுரை மாநகரில் 21—6—81 அன்று இறையடியில் கலந்தார்கள். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் நூலக இயல் துணைப் பேராசிரியர் (ரீடர்) பொறுப்பில் இருந்துவந்த அவர்கள் மாரடைப்பால் காலமானது தமிழ் நாட்டு நூலகத் துறைக்குப் பேரிழப்பாகும்.



அமைதியான தோற்றம், அனைவரிடமும் அன்பாகப் பழகும் பண்பு, மாணவர்களிடையே மட்டற்ற மதிப்புப் பெற்றிருந்த பாங்கு, புத்தம் புதுமலர் போன்ற புன்னகையுடன் கூடிய முக அமைப்பு, கடுஞ்சொல் வின்மை—அதே சமயம் மாணவர்களிடையே கண்டிப்பான தன்மை—இத்தனையும் ஒருருவாய்த் திகழ்ந்தவர் பேராசிரியர்.

திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சீமையில் 28—1—1928இல் தோன்றிய இப் பேராசிரியர் நாங்குநேரியில் பள்ளிக்கல்வியை முடித்தபின் நெல்லை இந்துக் கல்லூரியிலும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிலும் பயின்று பி.ஓ.எல் (ஆனர்சு) பட்டம் பெற்றார். பின்னர் ஆசிரியப்பயிற்சிக்கல்வி, நூலகப்பயிற்சிக்கல்வி என்னும் இருதுறைகளிலும் பட்டம் பெற்றாலும் நூலகப் பணியிலேயே பெரிதும் ஈடுபாடு கொண்டார்.

நெல்லை மாவட்ட நூலக ஆணைக்குழுவின் முதல் நூலகராகவும் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் நூலகராகவும் பணியாற்றிய அவர், பின்னாளில் சென்னைப் பல்கலைக்கழகத்திலும், மதுரைப்பல்கலைக் கழகத்திலும் பேராசிரியராகப் பணியாற்றுமளவிற்கு உயர்ந்தார்.

தமிழன் ஒருவன் முன்னேறுவதற்கு எத்தனை தடங்கல்கள் உண்டோ அத்தனை தடைகளும் அவருக்கு ஏற்பட்டன. அவர் அவை அனைத்தையும் எதிர் நீச்சலிட்டுக் கடந்து முன்னேறினார். நூலகத் துறையில் இருந்துகொண்டே தமிழ் இலக்கியத் துறையில் எம்.லிட். ஆய்வுப்பட்டம் பெற்றார். அவர் ‘டாக்டர்’ பட்ட ஆய்வேடும் ஒப்புதல் பெற்று அப் பட்டம் வழங்கப்பெறுதற்கு முன்னரே அவர் காலமானது வருத்தத்திற்குரியது.

பேராசிரியர் இலக்கியம், சமயம், நூலக இயல் போன்ற பல துறைகளில் முப்பதுக்கு மேற்பட்ட அரிய நூல்களைத் தீட்டியுள்ளார். நூலக இயலை எளிய நடையில் இனிய தமிழில் தமிழ்மக்களுக்கு அறிமுகப் படுத்திய முதல் நூலாசிரியர் என்ற பெருமை அவர்களையே சாரும். நூலகத் துறையில் அவருக்கிருந்த நாட்டம் பெரியது. தமிழ்நாட்டுப் பொது நூலகத் துறையில் பல மாற்றங்களைச் செய்ய அவர் விரும்பினார். நூலக இயல் ஆசிரியர் என்ற முறையில் அமெரிக்க நாட்டில் நான்கு மாதங்கள் சுற்றுப் பயணம் செய்து அங்குள்ள நூலகப் பள்ளிகள், பொதுநூலகங்கள் நடைபெறும் வகையை நன்கு ஆய்ந்து 'நூலக நாட்டில் நூற்றிருபது நாட்கள்' என்ற நூலில் நன்கு விளக்கியுள்ளார்.

அவருடைய பல்வகைப் பணிகளைப் பாராட்டிப் பல ஆன்றமைந்த அவையினர், அறநெறிச் செல்வர், நூலகக் கலாநிதி, அருங்கலைக் கோன், நூலக அறிவியல் நுண்ணறிவாளர் போன்ற பட்டங்களை அவருக்குச் சூட்டிப் போற்றியுள்ளனர்.

இத்தகு வியத்தகு ஆற்றல் பெற்ற அறிஞர் அவர்கள் மறைவு தமிழுக்கும் சைவத்திற்கும் நூலகத் துறைக்கும் ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். அவரைப் பிரிந்து வருந்தும் அவர்தம் துணைவியாருக்கும் ஆன்றமைந்த மக்களுக்கும் எம் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

## பேராசிரியர் மா. ரா. இளங்கோவன் பிரிவு

வரலாற்றுப் பேரறிஞர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்களின் மூத்த மகனாரும் சென்னை, புதுக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியருமான மா.ரா.இளங்கோவன் அவர்கள் 23-6-81 அன்று மறைவுற்றார்கள். தந்தையாரின் புகழை நிலைநாட்டும் வகையில் அமைதியான பண்பும் அடங்கிய தோற்றமும் அரிய ஆராய்ச்சித் திறனும் மிக்கு விளங்கியவர் ஆவர். குடும்பத்தின் தலைத்தலைவராக விளங்கிய அவர் வயது முதிரா நிலையில் மாரடைப்பு நோயால் மறைந்தது தமிழுக்குப் பேரிழப்பாகும்.

28—6—1932இல் தோன்றிய அவர் சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப் பள்ளியிலும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிலும் பயின்று தமிழ் இலக்கியத்தில் பி.ஏ. (ஆனர்சு) பட்டம் பெற்றார். கல்லூரியில் படிக்கும் நாள்களிலேயே இதழ்களுக்குக் கட்டுரைகளை எழுதும் ஆற்றல் பெற்றிருந்தார். புகழ்பெற்ற தேசிய நாளேடான 'சுதேசமித்திரனி'ன் துணை ஆசிரியராகச் சில ஆண்டுகள் பணியாற்றினார். அவ்வமயம் அந்நாளேடு வெளியிட்டுவந்த வார இதழின் பொறுப்பாசிரியராகவும் இருந்தார்.

தந்தையாரின் வழியிலேயே ஆசிரியப் பணியாற்ற விரும்பிச் சென்னைப் புதுக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பொறுப்பேற்றார். ஆசிரியர் என்ற முறையில் அவர் மாணவர்களிடையே சிறப்பான புகழுடன் விளங்கினார்.

ஆராய்ச்சியில் நாட்டம் கொண்ட அவர் தாம் முன்பு பார்த்துவந்த பணிக்கேற்ற வகையில் தமிழ் இதழ்களைப் பற்றிய ஆய்வைச் சென்னைப் பல்கலைக் கழக 'டாக்டர்' பட்டத்திற்காக மேற்கொண்டார். கடந்த மூன்றாண்டுகளாக ஆய்வுக்காகத் தம் ஓய்வு நேரம் முழுவதையும் ஒதுக்கிச் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்திலேயே தம் ஓய்வு நேரத்தையும் பழைய இதழ்களிடையே கழித்தார். பல கோணங்களில் அவர் ஆய்வைச் செலுத்தியதன் விளைவாகச் சில அரிய நூல்களைக் குறுகிய காலத்தில் படைத்தார். இந்திய இதழ்களின் வரலாற்றை விளக்கும் அவர்தம் நூல் கருத்துச் செறிவு மிக்க நூலாகும். அவர் இறுதியாக நோயுற்றிருந்த காலத்திலும் புதிய நூல் ஒன்றைப் படைத்துள்ளார்.

தமிழக மேலவைத் தலைவர் சிலம்புச்செல்வர் மாண்புமிகு டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்களிடம் பல்லாண்டுகளாகத் திரு. இளங்கோவன் நெருங்கிப் பழகி வந்தார். அவர்களையே தம் தலைவராகவும் வழிகாட்டியாகவும் கொண்டார். அவர்கள்மேலிருந்த ஈடுபாட்டையும் தாம் மேற்கொண்டிருந்த ஆய்வுப் பொருளையும் இணைத்துச் சிலம்புச் செல்வர் அவர்கள் நடத்திவந்த ஏடுகளைத் தனியாக ஆராய்ந்தார். சிலம்புச்செல்வர் என்னும் ஒளிமிகு வைரத்தின் ஒரு பட்டையைத் தீட்டிக் காட்டியவர் திரு. இளங்கோவன். சிலம்புச்செல்வர் அவர்கள் நல்ல சிறுகதை எழுத்தாளர் என்ற உண்மையை உலகுக்குணர்த்தியவர் நண்பர் இளங்கோவன். சிலம்புச்செல்வர் தம் இதழ்களில் பல்வேறு காலங்களில் எழுதிய சிறுகதைகளனைத்தையும் எடுத்துத் தொகுத்துத் தனி நூலாக வெளிப்படுத்தினர் இளங்கோ.

அவ்வாறே சிலம்புச்செல்வர் அவர்கள் இதுவரை தம் இதழ்களில் தீட்டிவந்த தலையங்கங்கள் அனைத்தையும் ஆய்ந்து அரசியல், வரலாறு, தமிழ்மொழி பற்றிய சிறப்புமிக்க தலையங்கங்கள் அனைத்தையும் தொகுத்துத் திரு. இளங்கோ தனி நூலாக வெளியிட்டுள்ளார். அடுத்த நூலுக்காக மேலும் வந்துள்ள தலையங்கங்களை ஆய்ந்து வந்தார். அப் பணி நிறைவேறுமுன்-அவர் மேற்கொண்ட 'டாக்டர்' பட்ட ஆய்வு முடியுமுன் அவர் திடுமென மறைந்தது பெருவருத்தத்திற்குரியதாகும்.

கல்விப் பணியில் ஈடுபாடு கொண்டிருந்த அளவு பொதுப்பணியிலும் அவருக்கு நாட்டம் இருந்தது. தமிழ்ப் பெரியார் மயிலை சிவமுத்து அவர்கள் தோற்றுவித்த மாணவர் மன்றத்தைத் திறம்பட நடத்திச் செல்லும் ஆட்சிக் குழுவில் உறுப்பினராகப் பல ஆண்டுகள் இருந்து அரிய பணியாற்றியுள்ளார். சென்னை மாநகரத் தமிழாசிரியர் மன்றத்தின் சிறப்பான வளர்ச்சிக்கும் அதன் தொண்டிற்கும் திரு. இளங்கோவன் அவர்களும் காரணராவார்.

திரு. இளங்கோவைப் போலவே அவர்தம் துணைவியாரான திருமதி புனிதவதி இளங்கோவன் அவர்களும் நல்ல இலக்கியப் பணி ஆற்றி வருபவர் ஆவார். சென்னை வானொலி நிலையத்தில் அருமையான நாடகங்களையும் நயமிக்க இலக்கிய உரைகளையும் உருவாக்கத் துணை நிற்கும் பணியில் உள்ளார். பண்பும் பரிவும் மிக்க துணைவியாரையும் பாசமிக்க மக்கட் செல்வத்தையும் விட்டுச் சென்ற திரு. இளங்கோவன் அவர்கள் ஆன்மா அமைதியுறவும் தலைவரின் பிரிவால் வருந்துகின்ற குடும்பத்தார் ஆறுதலுறவும் இறையருள் துணைநிற்க வேண்டுகின்றோம்.

# சுந்தர ஓதுவா மூர்த்திகள் தமிழிசைச் சங்கத் தொடக்க விழா

தமிழிசை மன்னர் தி சா. சுந்தர ஓதுவா மூர்த்திகள் தமிழிசைச் சங்கத் தொடக்கவிழா உடுமலையில் 21-6-81 அன்று காலை 9மணிக்குத் திருமதி வள்ளி நாயகி செந்திலின் தேவார இன்னிசைக் கச்சேரியுடன் ஆரம்பமாகியது. காலை 10 மணிக்குத் தொடக்க விழா நிகழ்ச்சியில் உடுமலை விசாலாட்சி மகளிர் கல்லூரி முதல்வர் செல்வி ஆ. ரா. இந்திரா அவர்கள் விழாவிற்குத் வந்தவர்களை வரவேற்றார். சங்கத்தைத் தொடங்கி வைத்துத் தலைமையுரை நிகழ்த்திய கிருபானந்தவாரியார் அடிகள் தமது உரையில், ''தமிழ் மக்களாகிய நாம் எந்தப் பாவத்தைச் செய்தாலும் செய்யலாம்; ஆனால் நன்றி மறக்கும் பாவத்தைச் செய்யக்கூடாது. தமிழ் வேதத்திற்காகத் திரு. சுந்தர ஓதுவா மூர்த்திகள் எப்படியெல்லாம் உழைத்தார் என்பது எங்களுக்குத் தெரியும்.



''தமிழிசைச் சங்கம் நின்று ஓங்கி வளர வேண்டும். இது பொன் விழா, வைரவிழாக் காணவேண்டும். சுந்தர ஓதுவா மூர்த்திகளின் தமிழிசைச் சங்கம் ஆல் போல் தழைத்து, இமயம் போல் ஓங்கி வளர வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

இவரையடுத்துப் பேசிய திருக்குறளார் வி. முனுசாமி அவர்கள், ''சுந்தர ஓதுவா மூர்த்திகள், தமிழ்நாடு ஈன்றெடுத்த இசைத் தவப்புதல்வர்களிலே ஒருபெரும் மகனாக விளங்கினார். தேவாரத்தில் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ், தெய்விகத் தமிழ் எல்லாம் இருக்கின்றது. தேவாரம் இல்லையெனில் தமிழ் நாகரிகம் இல்லை, தமிழ்த் தெய்விகம் இல்லை; தமிழ் இசை இல்லை. அத்தகைய தேவாரத்திற்கும், தமிழிசைக்கும் பெருமையைச்—சிறப்பை ஏற்படுத்தியவர்; நம் சுந்தர ஓதுவா மூர்த்திகள், தேவாரத்தை அவ்வளவு நன்றாகப் பாடியவர். உள்ளம் உருகப் பாடியவர்.'' அடுத்த மதுரை எஸ். சோமசுந்தரம் பேசினார்.

மாலை நிகழ்ச்சிக்குக் கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. கே. மலைச்சாமி அவர்கள் தலைமை தாங்கினார். செல்வி ஆ. ரா. இந்திரா அவர்களும், திரு. ஏ. என். வி. இராதா கிருட்டிணன் அவர்களும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் துணைப்பேராசிரியர் டாக்டர் இ. சுந்தரமூர்த்தி அவர்களும் வாழ்த்துரை வழங்கினர். விழாவின் இறுதியாகத் தமிழக அரசு கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் பேசினார். இரவு மதுரை சோமுவின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

---

# பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசனார் மறைவு

தேவார கலாநிதி எனத் தருமையாதீனமும், ஏழிசைத்தலைமகன் எனத் திருவண்ணாமலையாதீனமும், பண்ணாராய்ச்சி வித்தகர் என



மதுரையாதீனமும், தென்னிந்திய உயர் தனிச் செவ்விசைப் புலவரெனத் தஞ்சை நாட்டார் தமிழ்ப் பேரவையும் போற்றி அழைத்த குடந்தை ப. சுந்தரேசனாரவர்கள் 9—6—1981 மாலை கும்பகோணத்தில் இறைவனடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து ஆற்றொணாத் துயரெய்துகின்றோம்.

இவரது மறைவு தமிழிசை உலகத்திற்கும் தமிழருக்கும் பேரிழப்பாகும். திரு. சுந்தரேசனாரவர்கள் சீர்காழியில் 22—5—1914இல் திரு. பஞ்சநதம் பிள்ளை, குப்பம்மாள் ஆகியோருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றினார். அவர் கந்தசாமி ஐயாவிடம் இசைப்பயிற்சி தொடங்கி வேப்பத்தூர் பாலசுப்பிரமணிய ஐயர், வேதாரணியம் பல்லவி வித்துவான் இராமச்சந்திர ஐயர் ஆகியோரிடம் முறையே கர்நாடக இசையினைப் பயின்றார். பின்னரும் அருட்டிரு விபுலானந்தரிடம் பாடம் கேட்டார். தமிழ்மக்களுக்கே உரிய இசைப் பண்பை ஆய்ந்து விபுலானந்தரின் வழிமாணவராக விளங்கினார். 1949 முதல் மூன்றாண்டு திருவையாறு அரசர் கல்லூரியில் இசையாசிரியராகவும் 1952 முதல் மூன்றாண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தேவார இன்னிசை விரிவுரையாளராகவும் பணியாற்றினார்.

தமிழகத்தில் நிகழ்ந்த இரு உலகத்தமிழ் மாநாடுகளிலும் தமது ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்தார். நமது குடந்தைக் கிளைக் கழகத்தில் 6 ஆண்டுகள் புதுக் கணக்கு நாளில் இறைவழிபாடு செய்து புதுக்கணக்கினை எழுதித் தந்திருக்கின்றார்.

வானொலி மூலம் தமது இசையாராய்ச்சிக் கருத்துக்களையும் குறவஞ்சி முதலியவற்றையும் தொடர்ந்து வெளியிட்டு வந்தார். சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் வரும் இசை நுணுக்கங்களை ஆங்காங்கே தொடர்சொற்பணிகளால் விளக்கியதோடு பெரிய புராணத்தில் ஆனாய நாயனார் புராணம் முதலியவற்றில் காணப்பெறும் இசை நுணுக்கங்களையும் தமிழகத்தில் வெளிவரும் எல்லாச் சிறப்பு மலர்களிலும் வெளியிட்டு வந்தார். சித்தாந்தம், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில், ஞானசம்பந்தம் முதலிய இதழ்களிலும் தமது இசையாராய்ச்சியை வெளியிட்டார்.

இத்தகைய பணிகளைக்கண்டு மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் இசையாராய்ச்சியாளர் பணியைத் தந்தது. அப் பணியை ஏற்றுச் சிறப்புற நடத்திவந்த இவர் 9—6—1981இல் இறையடி சேர்ந்தார்.

## செய்திகளும் குறிப்புக்களும்

### திருக்கழுக்குன்றத்தில் இன்னிசைப் பெருவிழா

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் திருக்கழுக் குன்றத்தில், ஆனிமகத் திருநாளையொட்டி நடைபெற்றுவரும் திருமுறை இன்னிசைப் பெருவிழாவின் 36 ஆம் ஆண்டு நிகழ்ச்சிகள் சூலை 2, 3, 4, 5 நாள்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றன. தருமபுரம் சாமிநாதன் தலைமை தாங்கினார். தவத்திரு தேமொழியார், திரு அ. தி. அ. ஈசுவர் மற்றும் பல சமயப் பெரியார்கள் சிறப்புரை ஆற்றினர்.

### சிலம்புச் செல்வர் முனைவர் ம. பொ. சி. அவர்களின் 76ஆவது பிறந்தநாள் விழா

தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவர், சிலம்புச் செல்வர் முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்களின் 76ஆவது பிறந்தநாள் விழா 26—6—1981 அன்று, சென்னைக் கலைவாணர் அரங்கில், தமிழக முதல்வர் மாண்புமிகு. ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அதுபோது திரு. ம. பொ. சி. எழுதிய "வில்லி பாரதத்தில் தமிழுணர்ச்சி" என்னும் நூலைக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் வெளியிட்டார். பெருமக்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர்.

### இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவு ஊர்வலம்

இலங்கையிலுள்ள தமிழர்கள் சிங்களவரால் கொடுமைப்படுத்தப் படுவதைக் கண்டித்து 20—6—1981 அன்று, கோவைத் தமிழக—ஈழப் பண்பாட்டு மன்றத்தின் சார்பில், பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்கள் தலைமையில் பெரியதோர் ஊர்வலம் நடைபெற்றது. பல்வேறு அரசியல் கட்சியினரும், மாணவர்களும் இதில் பங்குகொண்டனர். ஊர்வலத்தினர் கோவை மாவட்ட ஆட்சித் தலைவரிடம் ஒரு விண்ணப்பம் கொடுத்தனர்.

### "வழிபாட்டில் வல்லாண்மை" நூல் வெளியீட்டு விழா

திரு. கு. ச. ஆனந்தன் அவர்களின் 5-வது ஆய்வுப் படைப்பான 'வழிபாட்டில் வல்லாண்மை' என்னும் நூல் வெளியீட்டு விழா 5—7—1981 அன்று வடகோவை, கல்வி அகத்தில் கோவை சிந்தனைப் பேரவையின் சார்பில், திரு. வேலா இராசமாணிக்கனார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார் நூலை வெளியிடப் புலவரேறு மருதவாணனார் அதனைப் பெற்றுக்கொண்டார். அறிஞர் பலர் வாழ்த்துரை வழங்கினர். நூலா சிரியர் வழக்குரைஞர் கு ச. ஆனந்தன் நன்றி நவின்றார்.

### "நூலகக் கலாநிதி" அ. திருமலைமுத்துசாமி மறைவுக்கு இரங்கல்

3-7-1981 மாலை 6 மணி அளவில் தமிழ் அறிஞர், நூலகக் கலாநிதி திரு. அ. திருமலைமுத்துசாமி, எம். ஏ., பி.டி., எம். லிட்.

எம். லிப், எஸ்ஸி, அவர்களின் மறைவு குறித்து ஓர் இரங்கல் கூட்டம் சென்னை, தேவநேயப் பாவாணர் மத்திய நூலகக் கட்டடத்தில், சென்னைப் பல்கலைக்கழக நூலகர் டாக்டர் பு. அ. மோகனராசன் அவர்கள் தலைமையில் கூடியது.

அவர் தம் தலைமை உரையில், மறைந்த திருமலை முத்துசாமி அவர்களின் சிறப்புக்களை எடுத்துக் கூறியதோடு சென்னைப் பல்கலைக்கழகத்தில் அவர்தம் நூலகவியல் பணிகளை ஆண்டுதோறும் நினைவு கூரத்தக்க வகையில் நூலகவியல் அறிஞர்கள் ஏதாவது தக்கதொரு நினைவினை என்றும் பசுமையாய் விளங்க வழிவகை செய்தால் சிறப்புடைத்தாகும் எனக் கூறினர்.

பின்னர்த் திருவாளர்கள் ஆர். தில்லைநாயகம், இரா. முத்துக் குமாரசாமி, பி. வேதமூர்த்தி, சீதாபதி, தினதயாளன், இராச கோபாலன், ஷாகுல் அமீது, இராகவன், சங்கரலிங்கம், நடராசன், முத்துக்கருப்பன், இராமசாமி, செல்வி வசந்தா, ஞானதேவி முதலியோர் பேசினர்.

தலைவர் முடிவுரையில் திரு. திருமலைமுத்துசாமி அவர்களின் நினைவாக அமைக்கப்பெறும் நினைவுப் பரிசுத் திட்டம், நாம் சேகரிக் கும் தொகை உரூபாய் ஆயிரத்திற்கு மேற்படின் நினைவுப் பரிசு தக்கமுறையில் அமைக்க வழி வகுக்கலாம். உரூபாய் ஆயிரத்திற்குக் குறையுமே ஆயின் அத் தொகையினைத் திருமதி திருமலைமுத்துசாமி அவர்களுக்குக் காசோலையின் வழி அனுப்பிவைக்கலாம் என்ற குறிப்பினை அவையின் ஆய்விற்கு வைத்தார். இக் கருத்தினை அவையோர் ஒருமனதாக ஏற்றனர். மேலும் இது குறித்து ஒரு சிறு குழுவினை அமைக்கலாம் எனத் திரு. வேதமூர்த்தி தெரிவித்தார்கள். இதனையும் அவை ஏற்றுக்கொண்டது. திரு. ஞானசேகரன் அவர்கள் தாம் இயற்றிய இரங்கற் பாவினைப் படித்தார். பின்னர் இரங்கல் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

### (செல்வி சிலம்பு, ௫௫-௬௧௫ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
Dr. G. விசுவநாதபிள்ளை அவர்கள், திருச்சி 20—00
திரு. துரை குருக்கள்
,, சந்திரசேகரன் முப்புரிநூலணி விழா
(10-9-81) நன்கொடை 25—00
,, P. V. கிரி 'தமிழரசு' சென்னை-2 10—00

———

# மதிப்புரை

## யோகாசன முறையில் வைத்தியம்

[ஆசிரியர் : யோகி, என். இராசன், C.A.D.Y. திருச்செந்தூரான் பதிப்பகம், A. P. 1347, 7-வது செக்டர், 83-வது தெரு, கே.கே. நகர், சென்னை-78. விலை: ரூ. 6-50]

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பர். அத்தகைய குறைவற்ற செல்வத்தைப் பெற உடல்நலத்தைப் பேணிக் காத்தல் வேண்டும். அதையும் மீறி நோய்கண்டால் அதற்குத் தக்க மருத்துவம் செய்தல் வேண்டும். ஆனால், மருத்துவத்தால் மட்டும் நோய்கள் தீர்வதில்லை. உணவுமுறை, உடற்பயிற்சி இவற்றிலும் கவனம் செலுத்துதல் வேண்டும். அவ்வகையில் யோகாசனப் பயிற்சி பெரிதும் பயன்தர வல்லது. யோகாசன முறையே ஓர் இயற்கை மருத்துவமாகும். எனவே, உடல்நலம் நாடுவோர் அவ்வகையில் கவனம் செலுத்திப் பயன்பெற்று நல்லுடலும் நல்வாழ்வும் பெறத் திரு. யோகி என். இராசன் அவர்கள் இந்நூலின் மூலம் வழிவகைகளைக் காட்டுகின்றார். அனைவரும் படித்தறியவேண்டிய பயனுள்ள நூல்.

## சீட்டுக் கவி

[ஆசிரியர்: நெல்லை. க. சுப்பிரமணியன், வித்துவான் எம்.ஏ., பி.டி. தூய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை, பதிப்பாளர்: உமா நூலகம், 19, வேம்படித் தெரு, திருநெல்வேலி-6. விலை: ரூ. 4-50]

'சீட்டுக் கவி' என்னும் கடித இலக்கியம் இலக்கியக் கலையில் ஒரு சுவைமிக்க பகுதியாகும். மேலைநாட்டுப் புலவர்கள் இந்த இலக்கியப் பகுதிக்கு ஆக்கமளித்துள்ளனர். நம் நாட்டில் இக் கலை போதிய அளவு வளரவில்லை. ஆனால், காவடிச் சிந்து புகழ் அண்ணாமலை ரெட்டியார் இவ்விலக்கியத்திற்குப் புத்துயிர் அளித்துள்ளார். இப் புலவரின் புரவலராகத் திகழ்ந்த ஊற்றுமலை சமீன்தார் இருதயாலய மருதப்ப தேவருக்குத் தீட்டிய கடிதங்களே கற்பனைவளம் நிரம்பிய அழகிய கவிதைத் தொகுப்பாக அமைந்துள்ளன. தமிழ் நன்மக்கள் அவற்றைப் படித்துச் சுவைகாணும் வகையில் பொழிப்புரையும், குறிப்புகளும் வரைந்துள்ள இந்நூலாசிரியர் திரு. க. சுப்பிரமணியன் அவர்களின் முயற்சி பாராட்டத்தக்கது.

## கல்வி உன்னைக் காப்பாற்றும்

[ஆசிரியர் : ஆலந்தூர் கோ. மோகனரங்கன்; வசந்தா பதிப்பகம், 21, தருமராசா கோயில் தெரு, ஆலந்தூர், சென்னை-16. விலை:[ரூ. 5-90]

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றார் வள்ளுவர்; அத்தகைய அறிவுக்கு ஆக்கம் தருவது கல்வி. அக் கல்வி பெறாதவர் சிறந்த வாழ்வினைப் பெறார். அதனைப் பெற்றோர் பொருளில்லாவிடினும் சிறப்புடன் வாழ்வர். இந்த உண்மையைச் சிறுவர்கட்கு உணர்த்த, பூங்குன்றன் என்னும் ஓர் இளைஞனின் வாழ்க்கைப் பயணத்தை அடிப்படையாக வைத்துச் சுவைபட நயமாக, எளிமையாக 8 சிறுகதைகளை ஒரே தொடர்கதையாக எழுதியுள்ள ஆசிரியரின் திறம் பாராட்டத்தக்கது. இஃதொரு பயனுள்ள சிறுவர் இலக்கியமாகத் திகழ்கின்றது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
60, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இனிக்கும் இலக்கணம்—புலவர் இரா. திருமுருகன் | 7 | 50 |
| இலக்கியத்தில் அறிவியல்—பி. எல். சாமி, ஐ.ஏ.எஸ். | 15 | 00 |
| இதழியல் நோக்கி—மா. ரா. இளங்கோவன், எம்.ஏ. | 8 | 00 |
| ஆவிகள் தொடர்பும் அடையும் நன்மைகளும் —வி. ரவிச்சந்திரன் | 8 | 00 |
| ஆவிகள் பேசுகின்றன ,, | 6 | 00 |
| கைரேகைக் கலை—சத்தியா, பி.காம். | 20 | 00 |
| திருக்குறள் மரபுகள் (ஆய்வு) —டாக்டர் கு. மோகனராஜ் | 35 | 00 |
| தமிழ்த்தென்றல் திரு. வி. க. —டாக்டர் ஈ. ச. விசுவநாதன் | 8 | 50 |
| எனக்குத் தொழில் கவிதை—வண்ணை மூர்த்தி | 4 | 90 |
| தான், தன் சுகம் - சிவசங்கரி | 5 | 00 |
| நிற்க நேரமில்லை—லட்சுமி | 11 | 00 |
| நல்ல நண்பர்களைப் பெறுவது எப்படி?-பி. சி. கணேசன் | 6 | 00 |
| வீட்டுப் பூச்சிகளும், ஒழிக்கும் முறைகளும் —எஸ். ஏ. குசைராஜா | 6 | 00 |
| 200 எளிய வைத்திய முறைகள்—சொர்ணம் சோலை | 2 | 50 |
| புதுவை மாநிலத்தில் தமிழ் வளர்ச்சி —சு. தில்லைவனம், எம்.ஏ. | 10 | 00 |
| வானொலியில் சீறாப்புராணச் சொற்பொழிவுகள் —கலைமாமணி, கா. மு. ஷெரிப் | 8 | 00 |
| அறிவியல் சிந்தனைகள்—வே. தமையந்திரன் | 7 | 25 |
| தமிழ் வரலாறு நாகரிகமும், பண்பாடும் —புலவர் செந்துறைமுத்து | 25 | 00 |
| தமிழர் உணவு—கே. நமசிவாயம் | 12 | 00 |
| பனிபடர்ந்த பாறை—இந்துமதி | 12 | 00 |
| காவியப் பரிசு—ரகுநாதன் | 6 | 50 |
| ஐம்பொறி அகராதி—பன்மொழிப்புலவர் மு. ச. சிவம் | 20 | 00 |
| வாழ்வாங்கு வாழ வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள் - மு. ச. சிவம், எம்.ஏ, எம்.லிட். | 2 | 00 |
| திருக்குறள் நொடி வினா-விடை ,, | 10 | 00 |
| கூத்தும் சிலம்பும்—அ. அறிவுநம்பி, எம்.ஏ. | 7 | 00 |
| சங்கத் தமிழ்ப் பொன்மொழிகள் தெளிவுரை —க. முத்துச்சாமி | 10 | 00 |
| Language and Grammar—Dr. S. V. Subramaniam —K. M. Irulappan | 22 | 00 |
| A Study of the Perunkathai—Dr. Vijayalakshmi | 12 | 00 |

பதிவு எண் 4899.



அப்பர் அச்சகம், சென்னை-1.